[Mr. Speaker.] [9th March 1961

been passed by the Council with the following amendments and returned for the concurrence of the Assembly :—

AMENDMENTS.

*Clause* 21.

(1) After sub-clause (3) of caluse 21, *add* the following 'Explanation' :—

"*Explanation.*—For the purposes of sub-section (3), 'arrears of subscriptions' shall mean all the previous instalments realized from the substituted subscriber."

(2) Clause 59 of the Bill was put to the vote of the House and negatived. Clause 59 was deleted accordingly.

(3) Clauses 60 to 70 be renumbered as clauses 59 to 69.

I have also to announce to the House that the Madras State Housing Board Bill, 1961 (L.A. Bill No. 31 of 1960), has been passed by the Legislative Council without any recommendations.

## IV.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961-62—*cont.*

### (1) DEMAND XIV—POLICE—*cont.*

MR. SPEAKER : Now, let us proceed with the discussion on the Demand for Grants. Yesterday, we had discussion on the Police Demand for one hour and fifteen minutes. Today, we have two hours and forty-five minutes for the consideration of this Demand. That means, we will have to finish discussion on this Demand by 11-45 a.m. I would like to know how long the Hon. Minister for Home will take to reply to the discussion.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may take about forty-five minutes, Sir.

MR. SPEAKER : All right. I shall call the Hon. Minister at 11 o'clock to reply to the discussion. It is usual that one leader from the Opposition takes part in the discussion on any one day. If, however, more leaders want to take part in the discussion today, they may give their names to me. It is also not the custom for the Mover of a Cut Motion to be given more time than for other hon. Members. Very often, the Mover of a Cut Motion does not speak at all. However, if the Mover of the Cut Motion in this case wants more time, he may speak for 15 minutes. That is the position now. I have so far received the list of names of Members belonging to the Congress Party only. Other parties have not given the names of Members belonging to their parties who wish to speak on this Demand. So, I now call upon hon. Member Sri A. Vedarathnam to speak.

**SRI A. VEDARATHNAM :** கனம் தலைவர் அவர்களே, இந்தப் போலீஸ் மானியத்தை ஆதரிக்கும் முகத்தான் நான் சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். இந்தப் "போலீஸ்" என்ற பெயரைச் சொன்னாலேயே எனக்கு பிடிக்கவே இல்லை. அவர்

9th March 1961] [Sri A. Vedarathnam]

களிடத்தில் எனக்கு ஒரே வெறுப்பு. காரணம் என்னவென்றால் என்னுடைய ஊரில் நடந்த உப்பு சத்யாகிரகப் போராட்ட காலத்தில் காங்கிரஸ் தொண்டர்களை எல்லாம் புளியம் மிளாரினால் அடித்து அதனால் காங்கிரஸ் தொண்டர்கள் உடம்பில் பட்டை பட்டையாக காயம் ஏற்பட்டு ரத்தம் ஓடியது. அந்த முறையில் போலீஸ்காரர்கள் அடித்தார்கள். அதன் காரணமாகத்தான் போலீஸ் என்ற பெயரைக் கேட்ட மாத்திரத்திலேயே வெறுப்பு. அவர்கள்தான் அதற்கு மூலகாரணமாக இருந்தார்கள் என்று சொல்லலாம். அப்படி இருந்த இந்த போலீஸ் நாம் சுதந்தரம் அடைந்தபின் எப்படி இந்த முறையில் மாறினார்கள் என்ற விஷயத்தை நினைக்கும்போது ஒரு பெரிய ஆச்சரியமாக இருக்கிறது. அதே போலிசார்தான் எந்தத் தெருக்களிலே, எந்த வீதிகளிலே இந்தத் தொண்டர்களை எல்லாம் இப்படி அடித்துத் துன்புறுத்தினார்களோ, அந்தந்த தெருக்களிலேயே, வீதிகளிலேயே 1955-ம் வருஷத்திலே அங்கே வீசிய கடும் புயலிலே நல்ல பணி ஆற்றியுள்ளார்கள். அப்பொழுது அங்கே ரோடுகளில் எல்லாம் இரு மருங்கிலும் வீடுகளும், மரங்களும் அடியோடு விழுந்து, ரோடுகளையே மறைத்துவிட்டது. மனிதர்கள் நடப்பதற்குக்கூட மார்க்கம் இல்லாத நிலைமை அங்கே ஏற்பட்டது. அந்தசமயத்தில் அந்த ஜில்லாவில் இருந்த போலீஸ் தலைமை அதிகாரிகளும், மாகாண அதிகாரிகளும் அதி விரைவில் வெளி நாட்டுடன் தொடர்பு அற்றிருந்த அந்தப் பகுதிகளில் வயர்லெஸ் ஏற்பாடுகள் செய்து, ஓரிரு தினங்களில் மார்க்கங்களை எல்லாம் செப்பனிட்டு, மனிதர்கள் நடக்க முடியாமல் இருந்த அந்த இடத்தை எப்படியோ லாரிகளும், கார்களும் போகும்படியாகச் செய்தார்கள். அந்த சேவையைப் பார்த்த பிறகுதான் அவர்களிடத்திலிருந்த அந்த ஆவேஷம் எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாக மறைய ஆரம்பித்தது. அவர்கள் செய்த சேவையில் மிகவும் குறிப்பிடத்தக்க விஷயமென்னவென்றால், இந்த இடுபாடுகள் இருந்த வீடுகளிலெல்லாம் நகை, நாணயங்கள், பணம் போன்ற மதிப்புள்ள பொருள்கள் எவ்வளவோ இருந்தும்கூட ஒரு திருகாணிக்குச்சி கூடத் தவறாமல், உடயவர்களைக் கண்டுபிடித்து அவர்களிடம் சேர்ப்பித்தார்கள். ஆகவே அவர்களுடைய சேவையைப் பாராட்டுவதற்கு வேறு பல சான்றுகளைக்கூற நான் விரும்பவில்லை. அவர்கள் செய்யும் பணி இருக்கும் ஆட்சிபீடத்தைப் பொருத்தது என்பதை நிரூபித்திருக்கிறார்கள். வெள்ளையர்கள் காலத்தில், அவர்கள் அடிக்கச் சொன்னார்கள் என்பதற்காக அடித்தார்கள். இப்பொழுது மக்களிடத்தில் அன்பாயிருக்கவேண்டும், அவர்களுக்குச் சேவை செய்யவேண்டும், தொண்டர்களாய் மாறவேண்டும் என்று அதிகார பீடம் அவர்களுக்கு உத்தரவு கொடுத்த உடனே எப்படி மாறிவிட்டார்கள் என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே அவர்களது இந்தப் பணியைக் கூறினேன்.

அது மாத்திரமல்ல. அந்தக் காலத்தில் 1931-ம் வருஷத்தில் காங்கிரஸ் தொண்டர்கள் பலர் கள்ளுக்கடை மறியல் செய்தார்கள். அந்த மறியலின்மூலமாக மதுபானத்தை ஒழிக்கின்ற முயற்சி

[Sri A. Vedarathnam] [9th March 1961

யிலே ஈடுபட்டார்கள். அதிலே ஓரளவுக்குத்தான் வெற்றி காண முடிந்தது. முதலில் மதுவிலக்குச் சட்டம் வந்தபொழுது கொஞ்ச காலத்திற்கு அப்காரி இலாகாவிடம் இந்த மதுவிலக்கு குற்றங் களைக் கண்டுபிடிக்கும் பொறுப்பு விடப்பட்டிருந்தது. இதற்கு முன்பு இருந்த சட்ட சபையிலே ஸ்ரீ நாச்சியப்ப கவுண்டர் தலைமையிலே ஒரு விசாரணைக் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. அவர்கள் விசாரித்து இந்த அப்காரி இலாகாவினர் மதுபானத்திலே மூழ்கினவர்கள், எனவே அவர்களிடத்திலே இதை ஒப்படைத்தால் மதுவிலக்குக் குற்றங்களைச் சரியாகக் கண்டுபிடிக்க மாட்டார்கள், திட்டம் வெற்றி பெறாது என்று அந்தக் கமிட்டி ரிப்போர்ட் சமர்ப் பித்த உடனே, அரசாங்கம் இந்தப் பொறுப்பை போலீஸ் இலாகா விடம் ஒப்படைத்தது. எனக்குத் தெரிந்த வரையில், 100-க்கு 90 சதவிகிதத்திற்கு மேலே—கொஞ்சம் தைரியமாக இருக்கவேண்டு மென்ற காரணத்திற்காக 10 சதவிகிதம் விட்டிருக்கிறேனே தவிர, வேறொன்றும் இல்லை—மதுவிலக்குக் குற்றங்கள் அங்கே இல்லை என்று சொல்ல முடியும். அண்மையிலே காரைக்கால் என்ற ஊர் இல்லை என்று சொன்னால், 100-க்கு 99 சதவிகிதம் என்று சொல்ல லாம். காரைக்கால், பாண்டிச்சேரி இருக்கிற காரணத்தினால் அங்கேயிருந்து சரக்குகள் ஸ்மக்ளிங் செய்யப்படுகின்றன. இதைத் தவிர, அந்தப் பகுதியிலே மதுவிலக்குக் குற்றங்களே இல்லாத நிலையில் செய்திருக்கிறார்கள். இது ஒரு அரிய சேவை, ஒரு சிறந்த தொண்டு. நாம் மனதாரப் பாராட்ட வேண்டிய ஒரு முக்கியமான விஷயத்தை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். ஆகவே இன்றைக்கு நாட்டிலே அமைதி நிலவும்படியான சூழ்நிலையை உண்டாக்கியிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் போலீஸ் இலாகாதான் என்பதில் சந்தேகமில்லை.

இதிலே இன்னும் சில திருத்தங்கள் செய்ய வேண்டிய அவசியத்தைப்பற்றி நான் நம்முடைய போலீஸ் அமைச்சருக்கு சில யோசனைகள் கூற விரும்புகிறேன். சிறந்த தொண்டு புரிந்தவர் களுக்கெல்லாம் இப்பொழுது பரிசுகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. ஜனாதிபதி பதக்கம் போன்ற சன்மானங்களும் வழங்கப்படுகின்றன. உயர்ந்த சேவை செய்தவர்களுக்கு இந்த மாதிரி பரிசுகள் கொடுத்தபோதிலும், அதைக் காட்டிலும் இரண் டாந் தர, மூன்றாந் தர சேவை செய்தவர்களுக்கு எல்லாம் நாம் தக்க முறையில் பரிசுகள் அளிக்க வேண்டுமென்பதையும் தெரிவித் துக்கொள்ளுகிறேன். இப்பொழுது நம்முடைய நாட்டிலே, ஏராள மான தரிசு நிலங்கள் இருக்கின்றன. பட்டாளத்திற்குப் போய் ஒருசண்டையில் ஈடுபடாமல் இருப்பவர்களுக்கு, அதாவது பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் என்ற காரணத்திற்காக மட்டும், அவர்களுக்கு இந்த நிலங்கள் வழங்கப்படுகின்றன. அதே போன்று உயிருக்குத் துணிந்து பல கொள்ளைக் கூட்டங்களைக் கண்டுபிடித்தல், மதுபானத்தைத் திருட்டுத் தனமாகக் காய்ச்சி அதை ஒரு தொழிலாக நடத்துகிறவர்கள், இவர்கள் எல்லோரை யும் அந்தந்த இடங்களுக்குப் போய்க் கண்டுபிடித்து நல்ல பணியாற்றுகிறார்கள் என்று சொன்னால், அது உயிருக்குத் துணிந்துதான் இந்தச் சேவையைச் செய்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. அத்தகையவர்களுக்கும், இந்த நிலங்களை அட

மானம் செய்து கொடுத்தால், நலமாக இருக்கும் என்ற யோசனையை நமது அமைச்சரவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்த படியாக, வெளி ஜில்லாகளிலிருந்து சென்னை நகரத்திற்கு அநேகம் போலீஸ் கான்ஸ்டபிள்கள் மாற்றப்பட்டு இருக்கிறார்கள். எனக்குத் தெரியும், திருநெல்வேலி, மதுரை, சேலம், கோயம்புத்தூர் போன்ற தூர ஜில்லாக்களிலிருந்து பலர் நகரத்திற்கு மாற்றப்பட்டுள்ளார்கள். பல ஆண்டுகள் அவர்கள் இங்கே வந்து சேவை செய்த பிறகு சொந்த ஜில்லாவிற்குப் போக வேண்டுமென்று விரும்புவார்களேயானால், அவர்களை அந்த ஜில்லாவிற்கு அனுப்புவதுதான் முறை. அவர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தில் ஒரு முறை அவர்கள் தங்கள் சொந்த ஊருக்குப் போய்விட்டு வருவதென்றால், அவர்களுடைய சம்பளம் அந்த ஒரு பிரயாணத்திலேயே தீர்ந்துவிடும். இந்த மாதிரி வெளியூர்களிலிருந்து வந்து தங்கள் சொந்த ஊருக்குப் போகவேண்டியவர்களுக்கு ரெயில்வேக்களில் வழங்குவது போல "ப்ரீ பாஸ்" ஆவது கொடுத்தால் நலமாக இருக்கும். இது சாத்தியமில்லை என்று சொன்னால், சொந்த ஜில்லாக்களுக்குப் போக விரும்புகிறவர்களை மாற்றுவதற்கு அனுமதி கொடுக்க வேண்டியதவசியம் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

இன்னொரு முக்கியமான விஷயத்தை நான் இங்கே எடுத்துக் கூறினால், அதைத் தவறு என்று கருத மாட்டார்கள் என்று நினைக்கிறேன். போலீஸ் இலாகாவிலேயே இன்னும் சிலர் இந்த மதுபானத்திற்கு அடிமைப்பட்டு இருக்கிறார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அத்தகைய பழக்கம் உள்ளவர்களை வேறு இலாகாவிற்கு மாற்றவேண்டுமென்று மிகத் தாழ்மையுடன் போலீஸ் அமைச்சருக்குத் தெரிவித்துக் கொள்வதோடு, எத்தனையோ பணிகளை மேற்கொண்டு இருக்கிற நமது போலீஸ் அமைச்சருக்கு இந்த போலீஸ் இலாகாவிற்கு மட்டுமே ஒரு தனி மந்திரி இருந்தால்கூட போதாது என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதோடு வேறு இலாகாக்களின் பொறுப்பும் அவர்பேரில் சுமத்தப்பட்டிருக்கிறது. இத்தனை வேலை 9-30 a.m.
களுக்கு மத்தியிலும், இந்த இலாகாவின் வேலைகளை அவர் இத்தனை திறமையாக நிறைவேற்றுகிறார்கள் என்று சொன்னால் உண்மையிலேயே அது பாராட்டத் தகுந்தது. இந்தத் தள்ளாத வயதில் இத்தனை பொறுப்புகளை அவர்மீது சுமத்தியிருப்பது பிசகு. ஆகவே இனி பாக்கியிருக்கக்கூடிய காலத்திற்காவது அவருக்கு உதவியாக ஒரு துணை மந்திரியோ அல்லது பார்லிமென்டரி செக்ரடரியோ போடவேண்டும். போட்டு சகாயம் செய்தால்தான் மிகவும் நன்றாக இருக்கும் என்று தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri S. LAZAR:** கனம் சபாநாயகர் அவர்களே, போலீஸ் மானியத்தை ஆதரித்தும், அதிலே கொடுத்திருக்கக்கூடிய வெட்டுப் பிரேரணையை எதிர்த்தும் ஒருசில வார்த்தைகள் சொல்ல நினைக்கிறேன். பொதுவாக பல வெட்டுப் பிரேரணைகள் கொடுக்கப்

[Sri S. Lazar] [9th March 1961

பட்டிருக்கின்றன. அதிலே குறிப்பாக ஒரு பிரேரணையை மட்டுமே இங்கே பிரேரித்திருக்கிறார்கள். அந்தப் பிரேரணையை நன்றாக ஊன்றி வாசித்துப் பார்ப்போமேயானால் ஏதோ போலீஸ் இலாகாவினர் ஒரு குறுகிய நோக்கத்தோடு, தவறான நோக்கத்தோடு செயல் புரிந்து வருகிறார்கள் என்ற கருத்து தொனிக்கிறது. இந்தத் தீர்மானம் மட்டும் அல்ல. பிரேரிக்கப்படாமல் இருக்கிற மற்றைய தீர்மானங்கள் எல்லாவற்றையும் படித்துப் பார்த்தாலும் கூட போலீஸ் இலாகாவினருக்கு ஒரு 'மோடிவ்' கற்பிக்க முயற்சி எடுத்துக்கொண்டிருப்பதாகவே தெரிகிறது.

இதைப்பற்றிப் பேசுகின்றபோது ஒரு முக்கியமான கருத்தை சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அரசாங்க இலாகாக்களிலே இரண்டு விதங்கள் இருக்கின்றன. ஒருவகை இலாகாக்கள் அரசாங்கத்தினுடைய கொள்கையை நடைமுறையில் செயல்படுத்தி வரக்கூடியதாக அமைந்திருக்கிறது. ஆனால் வேறு சில இலாகாக்கள் சட்டத்தை அமுல் நடத்துகின்றவைகளாக இருக்கின்றன. எத்தனையோ உதாரணங்கள் சொல்ல முடியும்.

எந்த எந்த இலாகாக்கள் அரசாங்கத்தினுடைய கொள்கையை நடைமுறையில் கொண்டு வருவதற்குப் பாடுபட்டு வருகின்றனவோ அவைகளைப் பொறுத்தவரைக்கும் எந்தவிதமாக வேண்டுமானாலும் க்ரிடிசைஸ் பண்ணலாம். அது உண்மையில் வரவேற்கத் தக்கதாக இருக்கும். அதுபோல் அவர்கள் செய்கிற காரியங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது ஏதோ ஒரு நோக்கத்தோடு காரியங்களைச் செய்கிறார்கள் என்று சுட்டிக் காட்டினாலும் கூட பொருத்தமாக இருக்கும். ஆனால் சட்டத்தை அமுல் நடத்தக்கூடிய இலாகாக்களைப் பொறுத்தவரையிலும் இது போன்று மோடிவ் கற்பிப்பதானது உள்ளபடியே நாட்டுக்கு உகந்தது அல்ல. சொல்லக்கூடியவர்களுக்குமே நல்லது ஆகாது என்று தெரிவிக்க விரும்புகிறேன்.

உதாரணமாக உயர்நீதி மன்றங்கள் இருக்கின்றன. உயர்நீதி மன்றங்களுக்கு 'மோடிவ்' கற்பிக்கக்கூடாது என்று சட்டத்திலேயே வகுத்திருக்கிறோம். அதைப்போலவேதான் போலீஸ் இலாகாவும் சட்டத்தை அமுல் நடத்தக்கூடிய இலாகாவாக இருக்கிறது என்பதை மறந்து இங்கே ஒவ்வொரு விதமாகப் பேசுவதும், வெட்டுப் பிரேரணை கொடுப்பது என்பதும் நாட்டுக்கு உகந்தது ஆகாது என்று தெரிவிக்க விரும்புகிறேன்.

(Deputy Speaker in the Chair.)

இந்தமாதிரியான வெட்டுப் பிரேரணையைக் கொடுத்திருக்கக் கூடியவர்களுக்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இது மாதிரியான எண்ணம் இருந்திருக்கவில்லை. அதுவும் இரண்டு ஆண்டுக்கு முன்னால் பட்ஜெட் விவாதத்தில் பேசிய திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவர் குறிப்பாக எடுத்துச் சொன்னார்கள்—போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் மிகவும் திறமைசாலிகள். போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் இந்த நாட்டில் சிறந்த பணிகளைச் செய்யக்கூடியவர்கள்—என்று பாராட்டுரை வழங்கினார்கள். அவர்கள் கண்ட குறை ஒன்று—இப்பேர்ப்பட்ட திறமையான போலீஸ் இலாகாவை ஆளும் கட்சியினர் துஷ்

9th March 1961] [Sri S. Lazar]

பிரயோகம் செய்கிறார்கள். தங்களுக்குச் சாதகமாகத் தவறான வழியில் உபயோகித்துக் கொள்கிறார்கள் என்றுதான் சொன்னார்கள். அவர் பேசுகின்றபோது போலீஸ் இலாகாவிற்கு மோடிவ் கற்பிக்கவில்லை. ஆனால் இன்றையதினம் வெட்டுப் பிரேரணை கொடுக்கிறபோது திரு. அன்பழகன் அவர்கள்—

"காவல் துறையினர் அரசியல் கட்சிகளிடையே ஆளுங் கட்சிச் சார்பாக மற்ற கட்சியினருக்கும், பொது மக்களுக்கும் ஆற்ற வேண்டிய கடமையைக் கைவிட்டு இழைத்து வரும் அநீதியை விளக்குவதற்காக. . . ."

என்று அவ்விலாகாவிற்கு ஒரு மோடிவ் கற்பிக்கிற முறையில் சொல்லியிருக்கிறார்கள். இது முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது என்பதோடு இப்படி மோடிவ் கற்பித்துப் பேசுவதைவிட திட்டமான யோசனைகளைக் குறிப்பிட்டு அவ்விலாகா இன்னின்ன மாதிரியாக நடந்து கொண்டால் நல்லது என்று குறிப்பிட்டிருந்தால் மிகவும் உபயோகமானதாக இருந்திருக்கும். அதை விட்டு இப்படி வெட்டுப் பிரேரணை கொடுத்ததற்குக் காரணம் ஏதாவது குறிப்பிட்ட ஆதாரங்களைச் சொல்வார்கள் என்று நினைத்தேன். ஆனால் அவர்கள் பேசுவதற்கு முன்பாக என்னைப் பேச அழைத்துவிட்டார்கள். குறிப்பாக கும்பகோணத்தில் நடந்த சம்பவத்தைப்பற்றி சொல்வார்கள். அல்லது வேறு இடங்களில் நடந்தச் சம்பவங்களைப் பற்றி ஒன்றிரண்டு சொல்லலாம். அப்படிப் பட்ட உண்மையான சம்பவங்களைச் சொல்லிக் குறிப்பிட்டுப் பேசினால் வரவேற்கத்தக்கது. ஆனால் இதுபோன்ற வாசகத்தை அமைத்து போலீஸ் இலாகாவினரிடையே தகராறை மூட்டிவிட்டு அதன் பலனை தங்களுக்கு ஆதாயமாகக் கொள்ளலாம் என்று நினைத்திருந்தார்களானால் அது வருந்தத்தக்க விஷயமாகும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

என்னைப் பொறுத்தவரையில் இந்த இலாகா நல்லமுறையில் வேலை செய்ய வேண்டும், நல்ல முன்னேற்றம் பெறவேண்டும் என்கிற அடிப்படையில் ஒருசில கருத்துக்களைச் சொல்ல முற்படுகிறேன்.

அதிலே குறிப்பாக போலீஸ் இலாகாவில் வேலை செய்யக்கூடிய உத்தியோகஸ்தர்களுக்கு உத்தியோக உயர்வு என்று வருகிறபோது நன்றாக ஆராய்ந்து பார்த்து யாருக்கும் அதிருப்தி இல்லாத முறையில் நடந்துகொள்ள வேண்டியது மிகமிக அவசியம். ஒருவருக்கு அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால் அந்த இலாகாவில் உள்ள அத்தனைபேருக்கும் அது பரவிவிடுகிறது. மேலும் அப்பீல் என்று கொடுக்கிறபோது அதை ஒதுக்கித் தள்ளாது இருக்க வேண்டியது அவசியம் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

அடுத்து அரசாங்கத்தில் சிக்கனம் இருக்க வேண்டும். வெளியிடங்களில் டி.ஐ.ஜி. நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் எந்த அளவுக்குத் தேவைப்படுகிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை.

[Sri S. Lazar] [9th March 1961

அதேபோல தீ அணைக்கும் படையினரை இப்போது வைத்திருக் கிறோம். ஒருசில இடங்களில் தீ அணைக்கும் படையினர் நன்றாக வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் எங்கெங்கு தேவை ஏற்படுகிறதோ அங்கெல்லாம் மேலும் சில யூனிட்டுகள் ஏற்படுத்த வேண்டுமென்று தொடர்ந்து அரசாங்கத்தை வற்புறுத்தி வந்திருக்கிறோம்.

தீ அணைக்கும் படைகள் மாகாணம் பூராவிலும் நன்றாக வேலை செய்கின்றன என்று சொல்ல முடியும். ஆனால் இன்னும் அனேக இடங்களில் அதனுடைய தேவை அவசியமாக இருப்பதால் மேலும் சில ஏற்படுத்த வேண்டுமென்று தொடர்ந்து அரசாங்கத்தை வற் புறுத்தி வந்திருக்கிறேன். குறிப்பாக திருச்சி ஜில்லாவில் பெரம்ப லூரிலும், அரியலூரிலும் தீ அணைக்கும் படைகளை அமைக்க வேண்டுமென்று அரசாங்கம் உணரக்கூடிய அளவில் போலீஸ் இலாக்காவினரும் வற்புறுத்தியிருக்கிறார்கள். இங்குள்ள சட்ட மன்ற உறுப்பினர் அத்தனைபேரும் எடுத்துச் சொல்லியிருக்கிறார் கள். பல லட்சக்கணக்கான ரூபாய் சேதப்படும் அளவிற்கு அந்தப் பகுதிகளில்தான் விபத்துக்கள் நேர்ந்துகொண்டு வருகின்றன. இருந்தபோதிலும் ஏதோ பிரையாரிடியில் இல்லை என்ற காரணத் தைச் சொல்லி ஒத்திப் போடாமல் அவசியமிருப்பதை உணர்ந்து அரசாங்கம் தீ அணைக்கும் படைகளை ஏற்படுத்த வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். இன்னும் இதைப்பற்றி பல அங்கத்தினர்கள் பல நல்ல யோசனைகள் சொல்ல இருப்பார் கள் என்று சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

* **SRI V. SUBBIAH :** கனம் உதவி சபாநாயகர் அவர் களே, 1961-62-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையிலே மிகப் பெரிய மான்யங்களிலே போலீஸ் இலாக்காவும் முக்கியமானது. இந்த மான்யத்திற்கு சுமார் 6 கோடி 63 லட்சம் 77 ஆயிரம் ஒதுக்கியிருக் கிறார்கள். குறிப்பாக பிரிட்டிஷ் ராஜ தம்பதிகள் நம் நகரத்திற்கு வந்த காலத்திலே வெகு நல்ல முறையிலே போலீசார்கள் பணி யாற்றினார்கள் என்பதைக் குறித்து நான் அவர்களைப் பாராட்டு கிறேன். இருப்பினும் பிரிட்டிஷ் ராஜ தம்பதிகள் நம் நகரத்தை விட்டு சென்ற பிறகு மிகப் பெரிய நெருக்கடியை அவர்கள் உண்டாக்கிவிட்டார்கள். சுமார் 16 ஆயிரம் போலீஸ்காரர்கள் வெளியிலிருந்து தருவிக்கப்பட்டிருந்தும் ஏராளமான மக்கள் ரோட்டுகளில் எல்லாம் வெகுவாக பாதிக்கக் கூடிய நிலைமை ஏற் பட்டது. மவுண்ட் ரோட்டிலும் இன்னும் பல இடங்களிலும் என் போன்றவர்கள்கூட, ஏன் எதிர்கட்சித் தலைவர் அவர்கள்கூட் மூன்று மணி நேரம் தாமதிக்கக் கூடிய அளவிலே நெருக்கடி உண்டாக்கியது. இத்தகைய நிலைமையை போலீசார்கள் சமா ளிக்க வில்லை என்ற காரணத்தினால்தான் இந்த மான்யத்தில் என்னுடைய வெட்டுப் பிரேரணை கொடுக்கப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக சிடி போலீசைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். குறிப்பாக மோட்டார் டிரான்ஸ்போர்ட் என்ற இனம் இதிலே வருகிறது. இந்த இனத்தில்தான் 6 லட்சத்தி 28 ஆயிரம் ரூபாய்க்கு மேல் செலவழிக்கப்படுகிறது. பிரிட்டிஷ்

9th March 1961] [Sri V. Subbiah]

ஆட்சி காலத்தில் போலீஸ் ஆபீசர்களுக்கு வான்கள் கொடுக்கப்படவில்லை; இப்போதும் போலீஸ் இலாகாக்களில் உள்ளவர்களுக்கும் பல வான்களும் ஜீப்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லா இடங்களிலும் சுற்றிக் கொண்டிருக்கின்றன. மவுன்ட் ரோட்டு போன்ற இடங்களில் அடிக்கடி போலீஸ் வான்கள் வந்து கொண்டிருப்பதை நான் கண்கூடாகக் கண்டேன். அரசாங்கத்தார் போலீஸ் அதிகாரிகள் உபயோகத்திற்கு வண்டிகள் கொடுத்திருந்தும் கார் அலவன்சும் கொடுப்பதற்கு என்ன காரணம் இருக்கிறது? அவர்களுக்கு வாகனங்கள் கொடுத்திருந்தும் சிடி டிராவலிங் அலவன்ஸ்லே 2 லட்சம் இருக்கிறது. இதெல்லாம் எனக்கு ஒன்றும் புரியவில்லை. நகரத்தில் இவ்வளவு செலவு செய்துவிட்டு தாலுக்கா தலைநகரங்களிலேயுள்ள போலீஸ் ஆபீசர்களுக்கு எந்தவித வாகன வசதிகளும் கொடுக்கப்படவில்லை. எத்தனை இலாக்காக்களைச் சேர்ந்த ஜீப்புக்கள் தெருக்களில் ஓடிக்கொண்டிருக்கின்றன. ஆனால் போலீஸ் ஆபீசர்களுக்கு 10 மைல், 15 மைலுக்கு அப்பால் உள்ள கிராமங்களில் திடீரென்று ஒரு கொலையோ, கொள்ளைக் கேசோ ஏற்பட்டால் அங்கு உடனே போவதற்கு வசதிகள் கிடையாது. ஆகையால் குறிப்பாக தாலுக்கா தலைநகரங்களிலேயுள்ள போலீஸ் ஆபீசர்களுக்கு ஜீப்புகள் கொடுக்க வேண்டும் என்பது என்னுடைய நோக்கம். அது மட்டும் அல்லாமல் தாலுக்கா தலைநகரங்களில் உள்ள ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனுக்கும் டெலிபோன் வசதி ஏற்படுத்திக் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியம். டெலிபோன் வசதி இல்லாத காரணத்தினால் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குத் தகவல் கொடுக்க முடியாமல் இருந்து வருகிறது. நகரங்களில் வார்ட் வார்டாக ஒரு சாதாரண போலீஸ் ஸ்டேஷனுக்கும்கூட டெலிபோன் வசதியிருக்கிறது. ஆனால் 40 ஆயிரம் 50 ஆயிரம் ஜனத்தொகை உள்ள பெரிய கிராமத்தில் உள்ள ஸ்டேஷன்களிலும் இல்லாமல் இருப்பது நல்லதல்ல. நகரத்திலே உள்ள டிரான்ஸ்போர்ட் செலவுகளைக் கனிசமான அளவு குறைத்து கிராமப் பகுதிகளுக்கு உபயோகமாகக் கூடிய முறையிலே மாற்றியாகவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸ்பெஷல் ரிவார்ட் என்று கொடுக்கப்படுகிறது. இது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இதற்குக் கிட்டதட்ட ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் செலவழிக்கிறார்கள் சென்னை நகரத்திலே. இதெல்லாம் யாருக்குக் கொடுக்கப்படுகிறது என்று எனக்குப் புரியவில்லை. இதற்கு கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் கொடுப்பார்கள் என்று நினைக்கிறேன். சி.ஐ.டி. இலாக்கா ஸ்பெஷல் ரிவார்ட் என்ற இனத்தில் 1½ லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். இதை எதற்குச் செலவழிக்கிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. அதற்கும் கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் கொடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக தீ அணைக்கும் படையைப் பற்றி மதிப்பிற்குரிய நண்பர் குறிப்பிட்டார். இதைப்பற்றி சென்ற நிதிநிலை

[Sri V. Subbiah] [9th March 1961

அறிக்கை விவாதத்தின் போதும் நான் குறிப்பிட்டேன். தீ அணைப்புப் படை பெரும்பாலும் நகரங்களுக்குத் தான் இருக்கிறது இதற்காக கிட்டதட்ட பல லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவழிக்கப்படுகின்றன. கிராமங்களில் விவசாயிகள் உற்பத்தி பொருள்களை பாதுகாத்துக் கொள்வதற்கு மாட்டின் தீவனம், வைக்கோல் போன்றவைகளை பாதுகாத்துக் கொள்வதற்கு தனியாக ஒரு யூனிட் இருக்க வேண்டும். பல கிராமங்களுக்கு மத்தியிலே ஒரு யூனிட் இருக்க வேண்டும் என்று சொன்னேன். இம்மாதிரி திட்டம் இந்த நிதிநிலை அறிக்கையிலும் செய்யவில்லை. அத்துடன் கிராமங்களில் உள்ள பொதுமக்களுக்கு உதவியாக இருக்க போலீஸ் படை இருக்க வேண்டுமென்று சொன்னேன். கிராம போலீஸுக்கென்று பொதுவாக குறிப்பிட்டிருக்கிறதே தவிர அதற்காக ஏதாவது நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அது 'நில்' ஆகத்தான் இருக்கிறது. சி.ஐ.டி. இலாக்காவிலே ஸ்பெஷல் ரிவார்ட் என்று நகரத்தில் உள்ளவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. ஆனால் 100-க்கு 80 விகிதம் இருக்கும் கிராம மக்களின் பாதுகாப்பிற்கான திட்டங்கள் இந்த நிதிநிலை அறிக்கையிலே காணப்படவில்லை. தீ அணைப்பு வசதிகளும் கிராமப்புறங்களில் இல்லை. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஸ்பெஷல் ஆர்ம்ட் போலிசினுடைய டிரான்ஸ்போர்ட் செலவிற்காக மூன்று லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஸ்பெஷல் ஆர்ம்ட் போலீஸ் என்று சொன்னால் அது எங்கு இருக்கிறது என்று தெரியவில்லை. ஒருவேளை ஆவடியில் இருக்கிறதோ என்னவோ தெரியவில்லை. இந்தத் துறையில் அரசாங்கத்தினுடைய வாகனங்கள் வைத்திருக்கும்போது இந்த இனத்தில் அவர்கள் மூன்று லட்ச ரூபாய் ஒதுக்கி இருப்பது ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது. போலீஸ் மான்யத்திலே 6¾ கோடி ரூபாய் மான்யத்திலே இம்மாதிரி பல லட்ச ரூபாய் டிரான்ஸ்போர்ட் செலவுக்குப் போய்விடுகிறதென்றால் ரொம்பவும் அநியாயமான செலவாகும். இதை ஊதாரித்தனம் என்று சொன்னால்கூட பொருத்தமாக இருக்கும். பொதுமக்கள் பணம் அந்த அளவிற்கு விரயம் ஆவது வருந்தத்தக்கது.

போலீஸ் இலாக்காவில் சாதாரண கான்ஸ்டெபிள்களின் நிலை மிகவும் பரிதாபகரமாக இருக்கிறது. அவர்களுக்கு நாம் போதுமான ஊதியம் கொடுக்கிறோமா என்று பார்க்க வேண்டும். அவர்கள் இரவும் பகலும் தெருக்களிலே மழையிலும் வெய்யிலிலும் இருந்து கஷ்டப்படுகிறார்கள். தேசத்தில் ரொம்ப உழைப்பாளிகளாக இப்படிக் கஷ்டப்படுகிற மக்கள் போலீஸ் கான்ஸ்டெபிள்கள் தான் என்று சொல்ல வேண்டும். அந்தளவு பாடுபடக் கூடியவர்களுக்கு எந்தளவு வசதிகள் செய்து கொடுக்கப் பட்டிருக்கிறது என்று பார்ப்போமேயானால், பரிதாபகரமான முறையில்தான் நிலையிருக்கிறது. ஒன்றிரண்டு இடங்களில் அவர்களுக்கு வீடுகள் கட்டித் தரப்படுகிறதே தவிர, அவர்களது குடும்பங்களுக்கு, அவர்களது எதிர்கால சந்ததிகளுக்கு அரசாங்கத்தார் பாதுகாப்பு அளிக்கவில்லை. அவர்களது குழந்தைகளுக்கு நல்ல முறையில் கல்வி வசதி போன்ற

9th March 1961] [Sri V. Subbiah]

வசதிகள் எல்லாம் செய்திருப்பதாகத் தெரியவில்லை. அவர்களுக்கு, அப்படிப்பட்ட வசதிகள் செய்து கொடுக்க வேண்டியது அவசியம். அவர்களது எதிர்காலம் நன்றாகயிருந்தால் தான் இந்த நாடு பாது காப்பான நிலையில், இந்த நாட்டில் பந்தோபஸ்து, இந்த நாட்டில் நீதி, நியாயம், நிர்வாகம் இவைகள் எல்லாம் ஒழுங்காக நடக்கும். அதை அரசாங்கம் விரும்பினால் இவைகளை யெல்லாம் நன்கு மாற்றியமைக்க வேண்டும். இப்படி, போலீஸ் இலாகாவில் பல லட்சக்கணக்கான ரூபாய் பல இனங் களில் இருக்கிறதென்றால் போலீஸ் அமைச்சர் அவர்கள் மிகவும் கண்காணிப்பாயிருந்து நல்லமுறையில் இந்த இலாகாவைச் சீர் திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். என் வெட்டுப் பிரேரணை பேரில் பேசியிருக்கிறேன். நான் கொடுத் திருக்கும் விவரங்கள், பட்ஜெட் குறிப்புகளிலிருந்துதான் எடுக்கப் பட்டது என்று தெரிவித்துக் கொண்டு நான் எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

* Sri K. VINAYAKAM : Deputy Speaker, Sir, I rise to support Demand No. XIV made with regard to Police Administration. The Police in the City had an year of great strain and stress during the visits of very important personages to the City recently. We had the visit of Prime Minister of Finland, President of the United Arab Republic, President of the U.S.S.R. and lastly Her Majesty the Queen of England accompanied by her Consort. We must have a conception of the great number of people who came to the City to see the Queen. What a tremendous work it should have been to organise those people on the pavements and on the two days of Queen's visit, even though we had tumultuous concourse of people in the City, not even one incident of stampede or accident occurred. Of course the Hon. Leader of the Opposition and some members were complaining about traffic arrangements. As far as the people were concerned, no accident of any kind took place. Due to some people who would not obey Police regulations one did have some bad time with the result there was stagnation of wheel traffic. The public also must know what their duties are. If we fail to do what is expected of us, it is not possible to avoid traffic jam even with the best system of Police administration. So we have this little inconvenience.

I have known that the police in the City have tactfully conducted themselves during times of crisis. We had plenty of strikes mostly of labour unions belonging to different political parties. On all these occasions the Police people conducted themselves very effectively. They did not give scope for untoward incidents but still the strikes went off without leaving any bad remark either on our administration or on the Police. As a citizen of Madras City I still remember the way in which the police conducted themselves during the recent floods. The havoc created by the gale and by floods is still green in my memory. People were stranded in islands on the outskirts of the city. People could not move about smoothly. They were obstructed by floods. Trees fell on the roads. But still they were looked after very well by the Police

[Sri K. Vinayakam] [9th March 1961

Department with the humanitarian work of distribution of food packets and rescuing the people from water-logged areas. Men belonging to the Fire Services have done very good work and they deserve our respect.

As far as detection of crimes in the City is concerned I am told that it has reached the highest mark. The Police have detected 61 per cent of the crimes in the City. It is certainly a better record. But we still look forward for better work in the City. Even under the Indian Penal Code the Police are empowered to use a little force, physical force to detect the crimes. But my note of warning to the Police department is that they should not resort to third degree methods. It was sad occurrence three or four years ago we had the Arumugam case. But such instances do not re-occur now. They have turned over a new leaf.

Traffic arrangements in places like Mount Road and opposite to Gemini Studios are commendable. Those who travel during the peak hours there will know what I mean. They have done a good work by which they are in a position to clear traffic as early as possible. I understand that the Commissioner of Police has produced a Master Plan to relieve traffic congestion in the City. Government would do well to implement that scheme as early as possible.

The greatest menace in the City is what is popularly known as ' cotton betting ', betting on prices of New York Cotton. As a citizen of the city I am aware of the great havoc it was causing on those people who indulged in such nefarious activities. That has been completely put out and thanks to the Police that has become a matter of past history. Illicit distillation is very rare as far as the City is concerned. It has been almost put out. But there are a few stray cases on the outskirts of the City. They are due to bad elements who bring this illicit arrack into the City. That also has got to be put down. The Police have been very vigilant on the borders of the city and they have detected many cases.

I am particularly happy that new Police stations and outposts have been opened in the City in the recent past. But I am pained to note that no fresh recruitment has been made to man these police stations. Here and there, whatever personnel is available have been put in these stations and things have been adjusted. I wish the Government launches upon a new recruitment measure with the result these stations could be properly manned.

I am told that the London Police system is the best in the world. I suggest that our Police Officers also should be deputed to cities like that and learn whatever is possible, if there be any, from foreign Police like Scotland Yard and thus better the Police system in our State also. As far as mofussal Police are concerned, one or two instances have been brought to my notice that equally well detective methods are not being carried out. The Police administration would do well to strengthen their system in the mofussal also so that crimes could be detected as early as possible

9th March 1961] [Sri K. Vinayakam]

and the miscreants brought to book immediately. I support this Demand and I am pained to note that almost all the cut-motions are based on political considerations or political antipathy. Some members have painted the picture as if the Police are a tool in the hands of the Congress. I know that the Police do what they think proper and just, whatever be the reports they receive from different political parties.

I am of the impression that there are stray instances here and there of Police officials also being politically biassed towards opposition parties. So I may bring to the notiec of this House that they do not consider about political personalities. For instance, when the Hon. the Chief Minister was addressing a public meeting somewhere in the mofussal, he was reminded about the time regarding the closure of the meeting. That shows that they do not consider about personalities. They consider the maintenance of law and order more important. 10 a.m.

So far as public meetings are concerned, there is regulation. The cumulative time to be taken up for public meeting is 3 hours. The loud-speakers should not be allowed to function after 10 p.m. If that be the Standing Orders of the Police authorities, is it not proper to give us permission to hold meeting from 7 p.m. to 10 p.m., as it has been the practice of the public in the City of Madras to come to the meetings only by 7 o'clock. The present practice is to give permission for the public meeting from 6 to 9 p.m. It is too early to hold any public meeting at 6 o'clock in the City. They can satisfy the regulation and at the same time they can give us facilities for holding the meeting from 7 to 10 p.m. instead of from 6 to 9 p.m., since 6 p.m. is too early for the public meeting to be convened and 9 p.m. is too early for the public meeting to be terminated. This may be considered by the department. Not only the Police authorities are worried over the fact that after the bundobust duty is over they have to return to the Police Station to report themselves and there is very little time for them to get back to their homes but this little inconvenience has got to be put up by that department. I, therefore, wish that the Hon. the Minister revises the Standing Orders of the Police Department.

DEPUTY SPEAKER : The hon. Member's time is up.

* **Sri K. N. PALANISWAMI GOUNDER :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்று சபை முன் வந்திருக்கும் போலீஸ் மான்யத்தை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். நமது ராஜ்யத்தில் பல துறைகள் மிகவும் திருப்தி அளித்து வருவது போல் போலீஸ் நிர்வாகமும் மக்களுக்குத் திருப்தி அளித்து வருகிறது. சமீபத்தில் பிரிட்டிஷ் ராணி வந்த காலத்திலும் நமது குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் அவர்கள் இங்கு குடியரசு தினத்தன்று வந்த போதும் நமது போலீஸ் அதிகாரிகள் நல்ல திறமையான முறையில் சட்டத்திற்குட்பட்டு மக்களின் திருப்தியைப் பெறுகின்ற அளவில் நடந்து கொண்டார்கள். அதற்காக போலீஸ் அமைச்சர் அவர்களையும்,

[Sri K. N. Palaniswami Gounder] [9th March 1961

போலீஸ் ஐ.ஜி. அவர்களேயும், நகர கமிஷனர் அவர்களேயும் நான் பாராட்டுகிறேன். முக்கியமாக மக்களுக்கு போலீஸ் மிகவும் அவசியம்தான் என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அவ்விதம் போலீஸ் நிர்வாகம் திறமையாக இருந்தால் மக்கள் திருப்தியோடு எந்தவிதமான பயமும் இல்லாமல் வாழ முடியும். இப்போது பல இடங்களில் போக்கு வரத்துக்கள் எல்லாம் அதிகரித்து வருவதாலும், ரோடு போக்கு வரத்து அதிகரிக்கப்பட்டிருப்பதாலும், திருட்டுகள், மதுவிலக்கு குற்றங்கள் போன்றவைகள் மிகவும் குறைந்திருக்கின்றன. இதிலிருந்து போலீஸ் நிர்வாகத்தின் திறனை நாம் நன்கு புரிந்து கொள்ள முடிகிறது. அதற்காக போலீஸ் அமைச்சர் அவர்களுக்கும், போலீஸ் இலாகாவினருக்கும், போலீஸ் இலாகா ஊழியர்களுக்கும் என் பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன். போலீஸ் என்பது முன் காலத்திலிருந்தே உதவியாக இருந்துவந்திருக்கிறது என்பதை நாம் தெரிந்திருக்கின்றோம். இன்றைக்கு நம்முடைய போலீஸ் இலாகாவினர் பல துறைகளில் வேலை செய்து வருகிறார்கள். அவர்களுக்கு இன்றைக்கு நாம் ஒதுக்கக்கூடிய 6 கோடி ரூபாய் பெரிய தொகை என்று சொல்ல முடியாது. நாம் சர்க்கார் துறையில் வேறு பல இலாகாக்களில் எவ்வளவோ பணம் செலவு செய்கிறோம். அப்படியிருந்தும் போலீஸ் இலாகாவினருக்குப் பல இடங்களில் போக்குவரத்து வசதி இல்லாமல் இருந்து கொண்டிருக்கிறது. ஜீப் கார் போன்ற வசதிகள் இல்லாமல் இருக்கிறது. ஆனால் நாம் எத்தனையோ இலாகாக்களுக்கு கால்நடை இலாகாவில் கருத்தரிப்பு திட்டம் போன்ற பலவற்றிற்கும், கூட்டுறவு ஸ்தாபனங்கள் பலவற்றிற்கும், பிளாக்குகளில் பலருக்கும் ஜீப் கார்கள் எல்லாம் கொடுத்திருக்கின்றோம். ஆனால் போலீஸ் இலாகாவினருக்கு ஜீப் போன்ற வசதிகள் அவசியமாக வேண்டியிருக்கிறது. சில இடங்களுக்கு போலீஸ் அவசரமாக செல்ல வேண்டியிருக்கிறது. அவ்விதமான சந்தர்ப்பங்களில் சைக்கிளில் செல்ல வேண்டிய நிலைமை ஏற்படுகிற காரணத்தால் அவசரப்படுகிற நேரத்தில் சப்-இன்ஸ்பெக்டரோ அல்லது போலீஸ் சிப்பந்திகளோ போய்ச் சேர முடியாத நிலை ஏற்படுகிறது. இதற்குள் திருட்டுகள் எல்லாம் நடந்து முடிந்துவிடும். ஆகவே இவர்களுக்கு போக்குவரத்து வசதி அளிக்க வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளவேண்டும். பல அவசியமில்லாத இலாகாக்களுக்கு, அதிலும் இதே அமைச்சர் அவர்களின்கீழ் இருக்கும் விவசாய இலாகாவில் பல ஜீப் கார்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மலேரியா திட்டத்திற்கு நூற்றுக்கணக்கான ஜீப் கார்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் முக்கியமாக தேவைப்படுகிற போலீஸ் சிப்பந்திகளுக்கு வான்கள் இல்லாமல் இருக்கின்றன. இந்த நிலையைப் போக்குவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அதோடு போலீஸ் இலாகாவிலுள்ள கான்ஸ்டபிள், ஹெட் கான்ஸ்டபிள் இவர்களுக்கு இருக்கின்ற சம்பளம் மிகவும் குறைவாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. அவர்கள் தங்கள் கடமையைச் செய்கின்ற நேரத்தில் தங்களுடைய குடும்பத்தின் கவலை இருந்து கொண்டிருந்தால் அவர்களுக்கு வேலை செய்வதற்கு, தங்களுடைய கடமைகளை நிறைவேற்றுவதில் உற்சாகம் இருக்

9th March 1961] [Sri K. N. Palaniswami Gounder]

காது. ஆகவே போதிய அளவு சம்பளத்தை உயர்த்திக் கொடுக்க வேண்டும். மில்லில் வேலை செய்கின்ற ஒரு பெண் தொழிலாளிக்குக் கூட இன்றையதினம் மாதம் 100 ரூபாய் சம்பளம் கிடைக்கின்றது. அந்த நிலையில் வெறும் 75 ரூபாய் சம்பளத்தை வைத்துக்கொண்டு வேலைபார்க்க வேண்டியிருப்பதால் தங்களுடைய கடமைகளைச் செய்வதில் சில நேரங்களில் தவறிவிடக்கூடிய நிலை ஏற்படுகின்றது. நாம் எத்தனையோ இனங்களில் அதிகமாக செலவு செய்கின்றோம். பஞ்சாயத்து யூனியனில் பல உத்யோகஸ்தர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கு எல்லாம் கொடுக்கப்படுகின்ற சம்பளத்தை எல்லாம் பார்த்து, இவர்களும் நல்ல முறையில் திறமையாக வேலையை நடத்துகின்ற முறையில் சம்பளம் கொடுப்பதற்கு முயற்சி எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். எனக்கு முன்னால் பேசிய பலரும் போலீஸ் நிர்வாகத்தைப்பற்றி பாராட்டினார்கள். அவ்வளவு தூரம் நல்ல திறமையான அளவில் வேலை செய்து வருகின்ற இவர்களுடைய ஊதியத்தை உயர்த்திக்கொடுத்து அவர்களுக்கு உற்சாகம் அளிக்கின்ற முறையில் பல நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு, இன்றையதினம் பல நகரங்களை எடுத்துக்கொண்டால். 50 ஆயிரம் ஜனத்தொகைக்கு மேற்பட்ட நகரங்களுக்கு இப்போது இருக்கின்ற போலீஸ் அதிகாரிகளோடு, கூடுதலாக ஒரு உதவி சப்-இன்ஸ்பெக்டரை போடுவதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லை என்றால் வேறு தனியாக ஒரு ஸ்டேஷனை ஏற்படுத்தவேண்டும். அதோடு அவர்களுக்கு வேண்டிய போக்குவரத்து வசதிகளும் கொடுக்கவேண்டும். எங்கள் திருப்பூர் நகரை எடுத்துக்கொண்டால், அங்கு கிட்டத்தட்ட ஒரு லட்சம் ஜனத்தொகை இருக்கிறது. ஆகவே அந்த நகரத்தில் இரண்டு ஸ்டேஷன்கள் அமைக்க வேண்டும் அல்லது கூடுதலாக ஒரு உதவி சப்-இன்ஸ்பெக்டர் நியமித்து சிப்பந்திகளையும் அதிகரிக்க வேண்டும்.

இன்றைய தினம், இதில் இருக்கக்கூடிய ஃபையர் சர்விஸ் விரிவாக பல இடங்களில் வைத்திருக்கவேண்டிய அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். லாசர் அவர்களும் இதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். முன்பு யுத்த காலத்தில் இதை பாதுகாப்புக்காக எல்லா ஜில்லா தலைநகரங்களிலும் ஏற்பாடு செய்து வைத்துக்கொண்டிருந்தார்கள். இது முன்னால் மத்திய சர்க்காரால்தான் நடத்தப்பட்டு வந்தது. பின்னால் நமது சர்க்காரிடம் வந்தது. இந்த ஃபையர் சர்விஸ்க்காக நாம் ஒரு கோடி ரூபாய் இதில் ஒதுக்கியிருக்கின்றோம். அவர்களுக்கு எப்போதாவது ஐந்து நிமிடங்கள் வேலை வந்து சேருகிறது. திருப்பூர் நகரத்தை எடுத்துக்கொண்டால் இந்த ஃபையர் சர்விஸில் 45 பேர்கள் தான் இருக்கிறார்கள். பொதுவான போலீஸ் ஸ்டேஷனிலும் 45 பேர்கள்தான் இருக்கிறார்கள். இம்மாதிரியான தீ அணைக்கும்படை சென்னை, மதுரை, கோயம்புத்தூர், திருச்சி, சேலம் முதலிய பெரிய நகரங்களில் வேண்டுமானால் இருக்கட்டும். அதாவது லட்சம் ஜனத்தொகைக்கு மேற்பட்ட நகரங்களில் மட்டும் வைத்துக்கொண்டால் போதுமானது. அதோடு இன்றைய தினம் ஃபையர் சர்விஸில் இருக்கின்றவர்கள் பொதுவாக இருக்கக்கூடிய போலீஸோடு சேர்க்கப்பட்டு விட்டால் அவசரத்திற்கு

[Sri K. N. Palaniswami Gounder] [9th March 1961

உபயோகப்படுவதற்கு வசதியாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இதைத் தவிர்த்து அநேகம் நகர சபைகளிலும் இந்தத் தீ அணைப்புப் படையை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். சென்னை ராஜ்யத்தில் சுமார் 80 நகர சபைகள் இருக்கின்றன. பம்பாய் போன்ற மகாராஷ்டிர ராஜ்யத்தில் எல்லாம் நாம் ஏற்படுத்தியிருப்பதைப்போன்று தீ அணைக்கும் படையினரை வைத்துக்கொண்டிருக்கவில்லை. அந்த காலத்தில் மத்திய சர்க்கார் ஏற்படுத்தியிருந்தார்கள், அதையே நாம் தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கிறோம். ஆகவே ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட ஜனத்தொகை இருக்கும் இடங்களில் மட்டும் இந்த ஃபையர் சர்வீஸை வைத்துக்கொண்டு மற்ற இடங்களிலுள்ளவர்களை சாதாரண போலீஸோடு சேர்த்து, அவர்களுடைய ஊதியத்தையும் சிறிதளவு உயர்த்திக்கொடுத்து, அவர்களுக்கு வேண்டிய போக்குவரத்து வசதிகளையும் செய்து கொடுக்க அரசாங்கம் முயற்சிக்கவேண்டும். இந்த வகையில் எல்லா வசதிகளையும் அவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, மறுமுறையும் அவர்களுக்கு என் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொண்டு உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI T. P. ELUMALAI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, போலீஸ் மானியத்தை ஆதரித்து எனது சில அபிப்பிராயங்களைச் சொல்லப் பிரியப்படுகிறேன். இந்த போலீஸ் இலாகா நம்முடைய மதிப்புக்குரிய அமைச்சர் அவர்களின் தலைமையின் கீழ் சிறந்த முறையில்—கட்சி சார்பற்ற முறையில்—நல்ல பணி செய்து வருவதை நல்லவர்கள் எல்லோரும் நன்றாக அறிவார்கள். என்னைப் பொறுத்த மட்டில் நம்முடைய போலீஸ் இலாகா அமைச்சர் அவர்கள் அதிகமாக காங்கிரஸ்காரர்களுக்கு இந்த இலாகாவினால் ஏற்படுகிற துன்பங்களை உடனடியாகத் தீர்க்காமல் அதை விசாரணை செய்து பின்னால் சரிபார்த்துச் செய்கிற ஒரு முறையில் எங்களுக்கு ஏற்படுகிற துன்பங்கள் கொஞ்சநஞ்சமல்ல. குறிப்பாகச் சொன்னால் காங்கிரஸ்காரர்களுக்கும் போலீஸாருக்கும் இடையே ஏற்பட்ட பல விஷயங்களில் அடிக்கடி துன்பப்பட்டவர்கள் அமைச்சரிடத்தில் போய் இங்கே நம்முடைய காங்கிரஸ் ஆட்சி அமைச்சர் இருக்கிறார்களே என்று ஓடிவந்து சொன்னபோதிலும், பொறுத்திருங்கள், விசாரணை செய்கிறேன் என்று சொல்லும்போது எங்களுக்கு அமைச்சர் பேரிலே ஒரு வித வெறுப்பு ஏற்படும் அளவுக்கு அவர் போலீஸ் இலாகாவைக் காப்பாற்றி இருக்கிறார்கள். அவர் இந்த இலாகாவின் நீதியையும் நேர்மையையும் காப்பாற்றி வருகிறார் என்று ஏதோ முகஸ்துதிக்காகச் சொல்லுகிறேன் என்று நினைக்கவேண்டாம் என்று நான் பணிவோடு சொல்லிக்கொள்கிறேன்.

மேலும் இந்த விஷயத்திலே எதிர்க் கட்சியிலே இருக்கிற நண்பர்கள் போலீஸ் இலாகாவினால் காங்கிரஸ் கட்சி வளர்கிறது, காங்கிரஸ் கட்சியில் இருக்கின்றவர்கள் வசதி பெறுகிறார்கள் என்று சொல்லி ஏமாற்றுகிறார்கள் என்றே நான் நினைக்கிறேன். போலீஸ்காரர்கள் அதிகப்படியாக காங்கிரஸ்காரர்களுக்கு உதவியாக இருக்கிறார்கள் என்று சொல்லி அவர்களுடைய உதவியைத் தாங்கள் பெற்றுக்கொள்ள இந்த மாதிரி முறையில் பேசுகிறார்கள்

9th March 1961] [Sri T. P. Elumalai]

என்று தான் நினைக்கிறேன். எங்களுக்கு— காங்கிரஸ் கட்சிக்கு— ஒருக்காலும் உதவியாக இருக்க மாட்டார் என்ற விஷயம் இவ்வளவு நாள் அமைச்சர் அவர்கள் நடத்தி வந்த நிர்வாகத் திலிருந்து தெரியும். இருந்தாலும் நான் ஒரு விஷயத்தைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். திருவொற்றியூரில் தி. மு. க. காவலர் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்தார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தில் ஏற்பட்ட குழப்பத்தின் காரணமாக இந்தக் காவலர் கூட்டம் நடைபெற்றது. அந்த சமயத்தில் கோவில் பிரமோற்சவம் வேறு நடைபெற்று வந்தது. திருவொற்றியூர் கோவில் பிரமோற்சவம் என்ருல் ஆயிரக்கணக்கான மக்கள் கூடு வார்கள். காவலர் கூட்டம் நடந்த இடம் ஐரோட்டில் தெருப்பக்க மாக இருந்தது—அதாவது அந்த வீட்டின் வாயில் ஐரோடு பக்கமாக இருந்தது. தலைவர்கள் ஐரோடு வாயில்புறமாக வந்தால் பெரும் கூட்டமாகிக் குழப்பம் ஏற்படும்—அதுவும் சினிமா நடிகர் கள் வருவார்களே என்று மக்கள் திரளாகக் கூடினர்கள்—அந்தக் காரணத்தினுல் தலைவர்களையெல்லாம் தெரு வழியாக அழைத்துக் கொண்டு வராமல் கொல்லைப்புறமாக அழைத்துக்கொண்டு போனர்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத் தினர் காவலர் கூட்டம் என்று சொன்னபோது ஏதோ போலீஸ் காரர் கூட்டம் போட்டார்களோ என்று எண்ணிக்கொண் டிருந்தேன்.

SRI T. P. ELUMALAI: திராவிட முன்னேற்றக் கழகக் காவலர் கூட்டம்—கட்சிக் காவலர் கூட்டம்—போலீஸ்காரர் கூட்ட மல்ல. ஆகவே அந்த நிலைமையிலே கொல்லைப் பக்கமாகத் தலைவர்கள் வந்தார்கள். கட்சியில் இருக்கின்ற மற்றவர்கள் வெறுப்பு உணர்ச்சியோடு வந்திருப்பார்கள், அதனுல் ஏதாவது கலகம் ஏற்படுத்தி விடுவார்களோ என்று அச்சத்தில் கொல்லைப் புறத்தில் பெரிய பந்தோபஸ்து போட்டு, சப்-இன்ஸ்பெக்டர் அங்கேயே காத்துக்கொண்டிருந்தார். அந்த சமயத்தில் நான் எனது ஆபீஸில் இருந்தேன். பின்னுல் நடந்த விஷயங்கள் எனக்குத் தெரியாது. அந்த சமயத்தில் எங்கள் ஆபீஸ் முன்பாக விளம்பரத்திற்காக ஒரு கொட்டகை அமைத்து, லௌட்ஸ்பீக்கர் அமைத்து—பாட்டு போட்டுக் கொண்டிருந்தார்கள்—ப்ளேட் போட்டுக்கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் "அண்ணு பாதை தெரிகிறதே" என்ற ஒரு பாட்டை மைக்கேன் போட்டார். ஏதோ மின்சாரக் கோளாறினுல் அந்தப் பாட்டு நின்று விட்டது. காவலர் கூட்டத்திற்காக வந்திருந்தவர்கள் அண்ணு பாட்டைப் போட்டவுடனே நிறுத்தி விட்டார்கள் என்று திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்தவர்கள் கலாட்டா செய்து கல்லை எடுத்து ஆபீஸ் மீது எறிந்தார்கள். அந்த சமயத்தில் நான் இல்லை. மண்டல காங்கிரஸ் கமிட்டித் தலைவர் போலீஸ் நிலையத்திற்குச் சென்று சொல்லப்போனர்கள்—அவர்கள் கொல்லைப்புறத்தில், போலீஸ் இருப்பது அவர்களுக்குத் தெரியாது. மண்டல காங்கிரஸ் கமிட்டி ஆபீஸ்மீது கல்லை எடுத்து அடித்தார்கள் என்று போலீஸ் நிலை யத்தில் ஒரு ரிப்போர்ட் கொடுத்தார்கள். பின்னுலே ஒரு மணி

[Sri T. P. Elumalai] [9th March 1961

நேரம் கழித்து அந்தத் தம்பிகள் எல்லோரும் கையில் இருக்கக் கூடிய கல்லெறி சக்தியை எல்லாம் காட்டிய பிறகு பின்னுல் சிறிய உதவி, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மூலமாகக் கிடைத்தது. அப்போது கூட திராவிட முன்னேற்றக் கழகக் காவலர் கட்டிடத்தை விட்டு போலீஸ் காவலர் வரவேயில்லை. பின்னுல் நான் அவரை விசாரித்தேன். அப்போது அவர் சொன்னுர். இங்கேகூட கூட்டம் நடக்கிறது, அங்கே கலகம் நடக்கிறது என்று அங்கு வந்து விட்டால், அந்த நேரத்தில் இங்கே ஏதாவது கலகம் ஏற்படக் கூடுமானுல் போலீஸ்காரர்கள் காங்கிரஸ்காரனைக் காப்பாற்ற ஓடி விட்டார்கள் என்ற குறை ஏற்படுமே, உங்களுக்கு அவமானம் ஏற்பட்டாலும் எனக்காகப் பொறுத்துக் கொள்ளுங்கள் என்று என்னிடத்தில் ரொம்பவும் அன்பாக சப்-இன்ஸ்பெக்டர் சொன்னுர்கள். நானும் இந்த விஷயத்திலே அக்கரை எடுத்து எந்தவித கலகத்திலும் ஈடுபடாமல், ஏதோ சமாதானக் கூட்டம் நடக்கிறது, நாம் சச்சரவு செய்து அவர்களுக்கு அதிருப்தி ஏற்படுகிற முறையில் ஒன்றும் செய்ய வேண்டாமென்று எங்கள் கட்சிக்காரர்களிடம் சொல்லி, இதோடு கலைந்து விடுங்கள் என்று சொல்லி, பின்னுல் ஆபீஸைப் பூட்டிக்கொண்டு போய் விட்டேன். பிறகு இரவு 7 அல்லது 8 மணிக்கு மண்டல காங்கிரஸ் கமிட்டி ஆபீஸைத் திறந்து வேலை பார்த்தோம். இந்த விஷயங்களைச் சொல்லவேண்டுமென்று சொல்லவில்லை. காங்கிரஸ்காரர்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தீர்ப்பதற்கு முன்னர், மற்ற தனிப்பட்ட வர்களுக்கு ஏற்பட்ட அவதியைத் தீர்ப்பதற்கு முன்னர், திராவிட முன்னேற்றக் கழகத்தையோ, அல்லது மற்ற கட்சியையோ தான் காப்பாற்றுகிருர்கள், எங்கள் அமைச்சர் பதவியில் இருக்கும் ஒரே காரணத்திற்காக. காங்கிரஸுக்கு ஆதரவாக இருக்கிருர்கள் என்ற பழியை காங்கிரஸ் கட்சி மீதும், காங்கிரஸ்காரர்கள் மீதும் சுமத்தவேண்டாம் என்றும் மற்றவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். என்னைப் பொறுத்தமட்டில் நான் காங்கிரஸ் ஊழியர்களில் கடைசி ஊழியனுக இருக்கிறேன். இதில் ஏற்படுகிற எதிர்ப்புப் பிரசார விஷயங்களைச் சுலபமாக அறிந்துகொள்ளக்கூடிய நிலையில் இருக் கிறேன். ஒவ்வொரு இலாகாவை எடுத்துக்கொண்டாலும், ஒவ் வொரு கட்சி அங்கத்தினர்களும் இலாகாவில் இருப்பார்கள். அவர்கள் பேசுவதை அறிந்திருக்கிறேன். மேலதிகாரிகளாக இருக் கின்றவர்கள்கூட அவர்களுக்குக் கட்சி இருக்கிற காரணத்தினுல் அவர்கள் பேசுகிற பேச்சும் சொல்லுகிற விஷயங்களும் எவ்வளவு மற்ற கட்சி பற்றோடு பேசுகிருர்கள் என்பது எனக்குத் தெரியும். எங்கள் ஆட்சி நடப்பதால் அதிகாரிகள் அத்தனை பேரும் காங்கிரஸ் கட்சிக்கே உதவி செய்வார்கள் என்று சொன்னுல் எதோ ஒரு விஷயத்திற்காகச் சொல்லுகிருர்களே தவிர, காங்கிரஸ் கட்சி மீது பழி சுமத்தும் எண்ணத்தோடு சொல்லவில்லை என்று சொல்லிக் கொண்டு மேலும் இந்த காவலர் படையினருக்கு, கடைசி சிப்பந்தி களாக இருக்கின்ற போலீஸ்காரர்களுக்கு பெரும்பாலும் அவர் களுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்பதில் சர்க்கார் கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும்—அதுவும் குறிப்பாக மேலதிகாரி கள் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சாதாரண மாக இருப்பவர்களுக்கு பெரும்பாலும் நிலம் வழங்குகிருர்கள். போலீஸ்காரர்கள் படுகிற அவஸ்தை கொஞ்சநஞ்சமல்ல. ஆகவே

9th March 1961] [Sri T. P. Elumalai]

இந்த விஷயத்தை அவர்களுக்காக சர்க்கார் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு, இந்த இலாகாவில் இருக்கிற ஹரிஜன சகோதரர்கள் எங்கேயாவது கிராமங்களுக்குச் சென்ருல் வீடு கிடைக்காமல் அவர்கள் படுகிற அவஸ்தை சொல்லி முடியாது. எனது தொகுதியில் ஒரு சப்-இன்ஸ்பெக்டருக்கு, ஹரிஜன சகோதரராக உள்ள அவருக்கு வீடு கிடைக்காமல் ஒரு சிறிய குடிசையில் இருக்கும் காட்சியை நானே கண்டேன். அவர்களுக்கு போலீஸ் நிலையங்களுக்குப் பக்கத்திலேயே இல்லங்கள் அமைத்துக் கொடுத்தும், புறம்போக்கு நிலையங்களைக் கொடுப்பதில் அவர்களுக்கு முதல் சலுகை கொடுத்தும், விவசாயம் செய்யக்கூடிய நிலமாக இருந்தாலும் சரி, வீடு கட்டும் நிலமாக இருந்தாலும் சரி, முதல் சலுகை கொடுத்தும் ஆதரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த மான்யத்தை மனப்பூர்வமாக ஆதரித்து, இதன் வெற்றியில்தான் இந்த மாநிலத்தின் வெற்றியும் இருக்கிறது என்று கூறி இந்த போலீஸ் இலாகாவை எந்த விதமான கட்சிச் சார்புமற்ற முறையில் நடத்துகிற அமைச்சர் அவர்களுக்கு சட்ட சபையின் சார்பில் பாராட்டுதல்களைத் தெரிவித்து எனது உரையை முடிக்கிறேன்—வணக்கம்.

* **Sri K. ANBAZHAGAN** : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, காவல் துறையினருக்கு அளிக்கப்பட வேண்டிய மான்யத்தை வெட்டவேண்டுமென்ற கருத்துப்பட தரப்பட்டுள்ள தீர்மானத்தையொட்டி என்னுடைய கருத்தை நான் கூற விரும்புகிறேன். இன்னும் கொடுக்கப்பட்டுள்ள வெட்டுத் தீர்மானங்கள் ஏறத்தாழ 16. அப்படி அளிக்கப்பட்டுள்ள அத்தனை தீர்மானங்களிலும், 6 தீர்மானங்கள், நண்பர் திரு. கே. விநாயகம் அவர்கள் குறிப்பிட்டு உரைத்ததும் இந்தச் சட்ட மன்றத்திலே பலர் சுட்டிக் காட்டியதும் போன்று இன்றைய தினம் இருக்கின்ற காவல் துறையினர் கட்சி சார்பாக நடக்க வேண்டிய நிலைக்கு ஆளாக்கப் பட்டு இருக்கிருர்கள் என்பதைத் தெரிவிப்பதே ஆகும். என்னுடைய தீர்மானமும் அக்கருத்துடையதே ஆகும். காவல் துறையினரை அடிக்கடி குற்றம் சாட்டிப் பேச வேண்டுமென்று ஆசை கொண்டவன் அல்ல நான். காவல் துறையினரை நன்கு மதிப்பதற்கும் பாராட்டுவதற்கும் தெரிந்தவன் நான். காவல் துறையினருக்கு அஞ்சவேண்டிய அவசியமோ, அவர்களாலே ஏதாவது ஆபத்து ஏற்பட்டு விடுமோ என்று கவலைப்பட வேண்டிய அவசியமோ கூட எனக்கு ஏற்பட்டதில்லை. காவல் துறையினரைப் புகழ்ந்து உரைப்பதன் மூலம் சில காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம் என்ற ஆசையும் எனக்கு ஏற்பட்டதில்லை. ஆனல் காவல் துறையினர் இன்றையதினம் சில ஆண்டுகளுக்கு முன்னலே எந்த அளவு நடுவுநிலையுடன் பணி புரிந்தார்களோ, அந்த அளவுக்குக் கட்சி சார்பில்லாமல் நடப்பதற்கு முடியாத நிலைக்கு ஆளாக்கப்படுகின்ருர்கள். அப்படி காவல் துறையினர் ஆளாக்கப்படுவதனல் ஆளும் கட்சியைச் சாராதவர்கள் பலர் பல தொல்லைகளுக்கு ஆளக்கப்பட்டு வருகிருர்கள்.

சென்ற ஆண்டு இந்தச் சட்ட மன்றத்திலே காவல் துறையினரைப்பற்றிப் பேசிய காலத்தில் செய்யார் கிராமத்தை எடுத்துக்கொண்டு, அங்கு போலீஸ் இலாகாவினால் இழைக்கப்

பட்ட சில தவறுகளையும், அநீதிகளையும் எடுத்துக்காட்டி, விசாரிக்க வேண்டுமென்று கனம் உள்துறை அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டேன். அதற்கு எந்த முறையில் நடவடிக்கை எடுக்கப் பட்டது, விசாரணை நடைபெற்றதா என்று எனக்கு இதுவரை தெரியவில்லை. மறுபடியும் இந்த ஆண்டு சோத்துப்பாக்கம் கிராமத்தில்—தவறு, அச்சரபாக்கத்துக்குப் பக்கத்தில் அந்தக் கிராமம் என்று நினைக்கிறேன்—அந்தக் கிராமம் எங்குள்ளது என்பதைக் குறித்துவைத்திருக்கிறேன். அங்கேயுள்ள சில காங்கிரஸ்காரர்களின் தூண்டுதலின் பேரில் போலிசாரால் தொல்லைக்கு ஆளாக்கப்பட்டு இருக்கிறார்கள். அவர்கள் அங்கு நடைபெற்ற அநீதியைக் குறித்து உள்துறை அமைச்சர் அவர் களுக்கும், மற்றும் எதிர்க்கட்சி தலைவர்களுக்கும் அனுப்பி இருக் கிறார்கள். நான் இதை இந்தச் சட்ட மன்றத்திலே ஏன் குறிப்பிடு கிறேன் என்றால், இதுவரை அதுபற்றி எந்தவித நடவடிக்கையும் எடுத்ததாகத் தெரியவில்லை. முன்னர் செய்யூர் பற்றிப் புகார் எழுப்பியபோது உடனடியாகத் தக்க நடவடிக்கை எடுத்திருப் பார்களேயானால், தவறு செய்தவர்களைத் தண்டித்து இருப்பார் களேயானால், தொடர்ந்து அப்படிப்பட்ட தவறுகள் நடக்காது. நடந்தால் விளைவு என்ன என்பதை அந்நடவடிக்கை காட்டும். ஆனால் அப்படிச் செய்யத் தவறியிருக்கிறார்கள். ஆனால் சில ஆளுங் கட்சி நண்பர்கள் மட்டும் பேசுகிறபோது, போலீஸ்காரர்கள் எதிர்க் கட்சியினருக்குத்தான் அதிக சலுகைகள் கொடுக்கிறார்கள் என்று சொன்னார்கள். சிலருக்குத் தங்களுடைய மனைவிகளைச் சந்தேகிப்பது வழக்கமாக இருக்கக்கூடும். நான் அந்த மனப்பான் மையை ஏற்றுக் கொள்பவனல்ல.

**Sri S. LAZAR :** It is an aspersion, Sir.

**Sri K. ANBAZHAGAN :** இப்படிச் சொல்வதிலே நான் எந்தத் தனிப்பட்டவர்களுடைய வாழ்க்கையிலே உள்ளதைப் பற்றியும் இங்கு குறிப்பிடவில்லை. போலீஸ் இலாகா அரசாங்கத்தினுடைய மனைவி, அரசாங்கம் அதற்குக் கணவன் போன்றது என்னும் முறையிலேதான் இதைக் குறிப்பிடுகிறேன். அப்படி இருக்கும்போது போலீஸ் இலாகா அமைச்சரைக்கூட விட்டுவிட்டு, அவ்விலாகாவைச் சேர்ந்தவர்கள் எதிர்க் கட்சி யினருக்குச் சாதகமாக நடக்கிறார்கள் என்று எப்படி ஒரு நண்பர் புகார் சொல்லுகிறார் என்பதுதான் தெரியவில்லை.

**The Hon. Sri K. KAMARAJ :** போலீஸ் இலாகா நியாயமாக நடைபெறுகிறது என்று சொல்லக் கூடாதா, என்ன ?

**Sri K. ANBAZHAGAN :** நான் சொல்வதிலே கனம் முதல் மந்திரி அவர்களுக்குக் கோபம் ஏற்படுவதற்கு எவ்வித காரணமும் கிடையாது. நான் சொல்வது எந்தத் தனிப்பட்டவர்களையும் பற்றியது அல்ல. காவல் துறையினர் எதிர்க் கட்சிகளுக்குச் சார்பாகிவிட்டார்கள் என்று கூறும் ஆளுங் கட்சியின் மனப்பான் மையையே விளக்குகிறேன்.

9th March 1961]

**SRI R. CHIDAMBARA BHARATHI : On a point of order, Sir.** நண்பர் அவர்கள் பேசும்போது, தனிப்பட்டவர்களை அல்ல, ஒரு சிலரை என்று குறிப்பிட்டார்கள். தவிர, இதுபற்றி முதல் மந்திரி அவர்களுக்குக் கோபம் வரவேண்டியதில்லை என்று கூறுவதால், யாரோ ஒருவரைப்பற்றிக் குறிப்பிடுகிறார் என்று கருத வேண்டியிருக்கிறது. ஆகவே, இதை வாபஸ் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**DEPUTY SPEAKER :** வாபஸ் வாங்கவேண்டிய தேவையில்லை. கனம் அங்கத்தினர் மேலும் தொடர்ந்து பேசலாம்.

**SRI K. ANBAZHAGAN :** நான் தனிப்பட்ட யாரையும் குறிப்பிடவில்லை. அரசாங்கம் கணவன், போலீஸ் இலாகா மனைவி என்றுதான் குறிப்பிட்டேன். ஆகவே, இந்த போலீஸ் ஆகிய மனைவியை அரசாங்கமாகிய கணவன் கட்டுப்பாடு செய்யக்கூடிய உரிமையும் வாய்ப்பும் அரசாங்கத்திற்குத்தான் ஏற்பட்டு இருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் அந்த போலீஸ் இலாகாவினை அரசாங்கம் தவறான காரியத்திற்குப் பயன்படுத்துவதற்கு இடமிருக்குமானால், அப்படி அதற்கு இடம் தந்துவிடக்கூடாது என்பதற்குத்தான் நான் இங்கு பேசுகிறேன். போலீஸ் இலாகாவிலே இருக்கக்கூடிய எல்லா அதிகாரிகளும் இதற்கு இடம் தருகிறார்கள் என்று நான் குறை கூறவில்லை. அதே போன்று எல்லா போலீஸ் சேவகர்களும் தவறுக்கு இடம் தருகிறார்கள் என்றும் நான் கூறவில்லை. அதேசமயத்தில் போலீஸ் இலாகாவிலே இருக்கக்கூடிய தனிப்பட்ட எவரையும் பிரித்தும், காட்டவும் விரும்பவில்லை. சிலர் தவறு செய்கிறார்கள். அந்த வகையிலே இந்த வேண்டுகோளை கனம் அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நடைபெற்ற நிகழ்ச்சிகளைத்தான் சொல்ல முயற்சிக்கின்றேன். தனிப்பட்டவர்களைக் குற்றஞ்சாட்ட அல்ல. அண்மையில் சென்னை சிந்தாதரிப்பேட்டையில், இத்தகைய கலவர நிகழ்ச்சி ஒன்று காங்கிரஸ் கட்சி பொதுக் கூட்டம் ஒன்று நடந்த பிறகு ஏற்பட்டு இருக்கிறது. 28-2-61-ல் அங்கு நடைபெற்ற இளைஞர் காங்கிரஸ் கூட்டம் முடிந்த பிறகு, அக்கூட்டத்திலிருந்து சுமார் 30 பேர்கள் அங்கே இருந்த திராவிட முன்னேற்றக் கழகக்கிளையின் பெயர்ப் பலகையை உடைத்தெறிந்து, அங்குள்ள கழகக் கொடியையும் கிழித்தெறிந்து கொளுத்தியதோடு, பக்கத்தில் இருந்த எம்.ஜி.ஆர். இரவுப் பள்ளியின் பலகையையும் உடைத்து பத்திரிகைப் படித்துக் கொண்டிருந்த இரண்டு இளைஞர்களை, அதுவும் பள்ளிக்கூட மாணவர்களை அடித்திருக்கிறார்கள் ; அப்படி அடித்ததினாலே அம்மாணவர்களுள் ஒருவரின் பல் தெறித்து கீழே விழுந்துள்ளது, அந்தப் பல்லையும் பொறுக்கி எடுத்து போலீசாரிடம் ஒப்படைத்துள்ளனர். பின்னர் அந்த இளைஞருக்கு காய்ச்சல் ஏற்பட்டு, மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டிருக்கிறார். நடைபெற்றது காங்கிரஸ் கூட்டம், ஆனால் அடிபட்டதோ திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள். இதுபற்றி போலீசிலே கூட ஒரு புகார் பதிவுச் செய்யப்பட்டிருக்கிறது. போலீசாரிடம் முறை

[Sri K. Anbazhagan] [9th March 1961

யிடும் வகையில் அங்குள்ள பொதுமக்கள் யார் யார் அடிபட்டார்கள், யார் யார் அடித்தார்கள் என்று அவர்களிடத்திலே கூறியதாகவும் சொல்லப்படுகிறது. ஆனால் நான் இங்கு அவர்கள் பெயரைக் கூற விரும்பவில்லை. அவர்கள் மீது இதுவரையில் எவ்வித நடவடிக்கையும் எடுத்ததாகத் தெரியவில்லை. இந்த சம்பவம் நடந்த இடத்தில் சாதாரண போலீஸ் அதிகாரிகள் மட்டும் அல்ல, அசிஸ்டெண்ட் கமிஷனர் திரு. சுடலைமுத்து அவர்களும் அந்த இடத்தில் இருந்திருக்கிறார். அதோடு சிறப்புக் காவல் துறையினரும் இருபது பேர் இருந்திருக்கின்றனர். இவ்வளவு பேர்கள் அங்கிருந்தும், அடித்து ஒடித்துத் தாக்கியதைப் பார்த்துக் கொண்டிருந்திருக்கிறார்களே தவிர, எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. இந்த ஒரு தடவை மட்டும் தான் இந்தச் சென்னை நகரத்திலே இத்தகு நிகழ்ச்சி நடைபெற்றது என்று சொல்வதற்கில்லை. நான் ஒரு பட்டியலே வைத்திருக்கிறேன். இதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் ஒரு பொது விசாரணை வைத்து விசாரிப்பதாக இருந்தாலும் நல்லதுதான். அல்லது அவரே அவரது மனச்சான்றின்படி விசாரித்து நடவடிக்கை எடுப்பதாக இருந்தாலும் சரி அல்லது நேரிலே என்னைக் கூப்பிட்டு எல்லா நிகழ்ச்சிகளைப்பற்றியும் கேட்டாலும், அவர்களுக்கு எல்லா விவரங்களையும் தர முன்வருவேன்.

ஜூன் 12, 1960-ல் சென்னை 60-வது வட்டத்தில் ஒரு கழகக் கூட்டம் நடைபெற்றது. நண்பர் திரு. கருணாநிதி அதிலே கலந்து கொண்டார். அந்த வட்டத்தின் செயலாளர் திரு. இராமானுஜம் அவர்களின் பால் டிப்போ கூட்டம் முடிந்தவுடன் தாக்கப்பட்டு, சேதம் விளைவிக்கப்பட்டது. அதற்கடுத்து பக்கத்திலுள்ள கிளைக் கழகமும் அண்ணா மன்றமும் தாக்கப்பட்டு, படங்கள் நொறுக்கப்பட்டு சேதம் செய்யப்பட்டது. அதேபோல், மறுநாள் சூளையிலும் எஸ்.எஸ்.ஆர். படிப்பகத்தைத் தாக்கி அங்கிருந்த தலைவர் படங்களுக்குத் தீ வைக்கப்பட்டது. தொடர்ந்து சில கழகத் தோழர்கள் தாக்கப்பட்டு சர்க்கார் மருத்துவ விடுதியில் சேர்க்கப்பட்டு சிகிச்சை பெற்றனர். இவைகளைக் குறித்து நேரடியாக போலீசுக்குத் தெரிவித்திருக்கிறார்கள். தெரிவித்தவர்களும் பொறுப்பற்றவர்கள் அல்ல. திராவிட முன்னேற்றக் கழகத்தின் அந்நாள் பொதுச் செயலாளரான இரா. நெடுஞ்செழியன் அவர்களும், இச் சட்ட மன்ற உறுப்பினர் டாக்டர் சத்தியவாணிமுத்து அவர்களும் நேரில் தெரிவித்துள்ளனர். இதுநாள் வரையிலும் எவ்வித நடவடிக்கையும் அதன்பேரில் எடுக்கப்படவில்லை. இதுபோல் இன்னும் பல நிகழ்ச்சிகளின் முழு விவரங்களையும் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன். ஆனால் அதற்குரிய நடவடிக்கைகள் எடுப்பதாக இருந்தால்தான், உண்மையிலேயே இது மகிழ்ச்சி தரக்கூடியதாகும். ஆனால் இப்படிப்பட்ட புகாரின் மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை என்பதையே இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

இதேபோன்று காஞ்சீபுரம் நகரத்திலும் இவ்வாறு சில நிகழ்ச்சிகள் நடந்திருப்பதன் விவரங்களைக் குறிப்பிட்டு, தீர்மானம் நிறைவேற்றி அமைச்சர் அவர்களுக்கும் ஒரு விண்ணப்பம்

9th March 1961] [Sri K. Anbazhagan]

அனுப்பி வைத்திருக்கிறார்கள். அப்படி நடைபெற்றதிலே, திரு. தனபால் என்ற கழகத் தோழரின் வீட்டில் நுழைந்து, கழகப் பொருள்களையும், கொடிகளையும் கைப் பற்றிச் சென்று அவைகளைத் தீயிட்டுக் கொளுத்தி யிருக்கின்றனர். அதேபோல் பெரிய காஞ்சீபுரத்திலே மஜீத் படிப்பகத்தின் கொட்டகையையே கொளுத்தி இருக் கின்றனர். அடுத்து, காஞ்சி வட்டம் 58-வது எண் வெங்கிடாபுரம் என்ற கிராமத்தில் கழகத் தோழர் ராகவன் என்பவருடைய பட்டுத் தறியை அறுத்தெறிந்து இருக்கிறார்கள். இவைகளைப் பற்றியெல்லாம் அங்குள்ள போலீசுக்கு சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

மேலும் 20-6-60-ல் சென்னைமாநகர் 13-வது வட்டம் சாலை விநாயகர் கோவில் தெருவில் ஒரு காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடந்து கொண்டிருக்கும்போதே அந்த வட்டத்து திராவிட முன்னேற்றக் கழகச் செயலாளரான திரு. எஸ். எஸ். துரை சாமியும், மற்றும் திரு. சிதம்பரம், திரு. கோபால் என்ற இரண்டு கழகத் தோழர்களும் கடுமையாகத் தாக்கப்பட்டனர். அதற்குக் காரணமாக இருந்த நபர் கைது செய்யப்பட்டு, அன்றிரவே ஜாமினில் விடப்பட்டிருக்கிறார். ஆனால் அதன் பின்னர் தொடர்ந்து வழக்கு நடைபெறவில்லை.

ஜூன் 22, 1960-ல் சென்னை 66-வது வட்டம் சிந்தாதிரிப் பேட்டையில் ஒரு காங்கிரஸ் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அப்போதும் தமது தையற்கடையில் இருந்து வேலை செய்து கொண்டிருந்த தோழர் கஜேந்திரன் என்பவர் தேசிய மன்றத் தினரால் தாக்கப்பட்டிருக்கிறார். ஆனால் உடனே போலீஸ் இன்ஸ்பெக்டர் அத்தோழரைக் காப்பாற்றி, காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்று தன் கடமையைச் செய்தார்கள். ஆனால் காரணமில்லாமல் தாக்கப்பட்ட தோழரின் புகாரைப் பதிவு செய்தனரே தவிர, குற்றவாளிகள் மீது வழக்குப் போடவில்லை.

அதே போல் மேல்மதுராமங்கலத்திற்கு கனம் போலீஸ் அமைச்சர் அவர்கள் 26-6-60-ல் சென்றிருக்கிறார்கள். அவர் செல்லு முன் கழகத் தோழர் வேணுகோபால் வீட்டின் முன்பும், கூரைகள் மீதும் கட்டப்பட்டிருந்த கொடிகளை அவிழ்த்து எறிந்ததுடன், அதைத் தடுக்க பார்த்த வேணுகோபால் என்பரையும் காங்கிரஸ் காரர்கள் தாக்கியிருக்கிறார்கள். ஆனால் அப்படித் தாக்கிய தோழர்கள்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : போலீஸ் அமைச்சர் அங்கிருந்தபோது இந்த விஷயம் நடந்ததாகப் புகார் சொல்லப் படுகிறது. அப்படியானால், அவர் அங்கிருந்து இதைக் கவனிக்க வில்லை என்று சொல்லப்படுகிறதா ?

SRI K. ANBAZHAGAN : போலீஸ் அமைச்சர் அவர்கள் அங்கு செல்வதற்கு முன்னாலே இது நடைபெற்றிருக்கிறது. ஆனால் இவ்விஷயம் அவர்களிடத்திலே சொல்லவில்லை என்று சொல்வார் களானால், இந்த அளவுக்கு போலீஸ் அமைச்சரை நெருங்குவதற்கு மக்கள் அஞ்சுகிறார்கள் என்று கூற நான் விரும்புகிறேன். ஆனால் இது நடைபெற்ற நிகழ்ச்சி.

[9th March 1961

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடத்திலே வருவதற்கு, நெருங்குவதற்கு அச்சப்படுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அதை நான் ஒரு பாராட்டுதலாக ஏற்றுக்கொள்ளுகிறேன். அத்தகையவர்கள், அப்பேர்ப்பட்டவர்கள் என்னை நெருங்குவதற்கு யோக்கியதை இல்லாதவர்கள் தான்.

SRI K. ANBAZHAGAN : தாக்கப்பட்ட தோழர் அந்த ஊரில் தனித்த தோழராக இருந்திருக்கலாம். அவர் நெருங்காத காரணத்தினால் குற்றத்தை மறுக்காமல் நான் நெருங்குவதை வைத்துக்கொண்டு, அதை விசாரித்து நீதி வழங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜூலை 9, 1960-ல் சென்னை 47-வது வட்டத்தில் காங்கிரஸ் கூட்டம் நடைபெற்றது. அந்தக் கூட்டம் நடைபெற்று முடிந்தபிறகு திராவிட முன்னேற்றக் கழகப்பணி மனையை உடைத்து, கழகக் கொடியைக் கொளுத்தி, உண்டியல் நிதியைக் களவாடிச் சென்றிருக்கிறார்கள். அதைப்பற்றிக் காவல் நிலையத்தில் புகார் பதிவு செய்தும், இதுவரையில் நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

இதை ஒட்டி 10-7-1960-ல் தெருக் கலவரம் ஒன்று நடைபெற்றது. அதற்கு திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் மீது வழக்குப் பதிவு செய்திருக்கிறார்கள் போலீசார். முன்னேற்றக் கழகத்தார் தாக்கப்பட்டது சம்பந்தமாக வழக்குப் பதிவு செய்யப்படவில்லை. வேறு கலவரம் ஒன்று நடைபெற்ற உடன் கழகத் தோழர்கள்மீது குற்றஞ்சாட்டப்பட்டு வழக்கிற்கு ஆளாக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஆகஸ்ட் 9, 1960-ல் சென்னை கோடம்பாக்கத்தில் காங்கிரஸ் கூட்டம் ஒன்று நடைபெற்றது. இங்குள்ள சட்டமன்ற உறுப்பினர் ஒருவர்கூட அந்தக் கூட்டத்தில் பேசினார். அந்தக் கூட்டம் நடைபெற்றவுடன் அன்றையதினம் ஏற்பட்ட கலவரத்தில் கழகத் தோழர்கள் தாக்கப்பட்டார்கள். அங்கே அவர்கள் தாக்கப்பட்டது கூட ஆச்சரியமில்லை. அங்கே தாக்கிய தோழர்கள் அங்கிருந்து ஊர்வலமாக வந்து புரசைவாக்கத்தில் நான் குடியிருக்கிற இடத்திற்குப் பக்கத்தில் உள்ள பச்சையப்பன் மன்றத்திலுள்ள கழகக் கொடியைக் கிழித்தெறிந்து, பலகையைத் தூக்கி எறிந்துவிட்டுச் சென்றார்கள். மன்றத்தைத் தாக்கிவிட்டுத் தெருவிலே போகும் பொழுது 'மகாத்மா காந்திக்கு ஜே' என்று கூச்சலிட்டுக் கொண்டு போனார்கள். அதைக் கேட்க உண்மையிலேயே நான் வெட்கப்பட்டேன், துக்கப்பட்டேன்.

SRI S. NAGARAJA MONEGAR : On a point of order Sir, கனம் அங்கத்தினர் அவர்கள் இவ்வளவு குற்றம் சாட்டுகிறார்களே? அவர்களுக்குள்ளேயே இப்பொழுது வித்தியாசம் இருக்கிறது, ஒருவருக்கொருவர் தாக்கிக்கொள்கிறார்கள் என்பது தெரிந்த விஷயம். சிலர் திடீரென்று கட்சியிலிருந்து பிரிந்து மாற்றுக் கட்சியில் சேருகிறார்கள் என்றும் பத்திரிகையில் படித்து வருகிறேன். . . . . . . .

DEPUTY SPEAKER : It is not a point of order. The hon. Member may resume his seat. Hon. Member Sri Anbazhagan may continue his speech.

9th March 1961]

**SRI K. ANBAZHAGAN :** ஆகஸ்ட் 1, 1960-ல் சென்னையில் திரு. காமராஜ் அவர்கள் பிறந்த தினத்தை ஒட்டி ஒரு ஊர்வலம் நடைபெற்ற பொழுது, 'தென்றல்திரை' என்னும் பத்திரிகை அலுவலகம் அன்றையதினம் தாக்கப்பட்டது.

நான் முன்பு குறிப்பிட்டதைப்போன்றே ஆகஸ்ட் 22 அல்லது 23, 1960-ல் சிந்தாதிரிப்பேட்டையில் நடந்த மற்றொரு காங்கிரஸ் கூட்டத்தில் அமைச்சர் திரு. கக்கன் அவர்கள் பேசினார்கள். கூட்டத்திலிருந்து அரை பர்லாங்கு தூரத்தில் தம் வீட்டில் உட்கார்ந்து இருந்த தோழர்கள் திருநாவுக்கரசு, லிங்கபூசணம் என்ற இரண்டு கழகத் தோழர்கள், 15 பேர்களால் சூழப்பட்டு தாக்கப்பட்டார்கள். ஏப்ரல் 1 போலீசார் அடிபட்ட தோழர்களைத் தூக்கிச் சென்றனர். ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு இரவு 12 மணிக்கு சிகிச்சைக்கு அழைத்துச் சென்றனர். வாக்கு மூலம் பதிவு செய்யப்படவில்லை, யார் யார்மீது புகார் கூறினார்களோ அவர்களைத் தேடவும் இல்லை. இதுவரையில் புகார் சொல்லப்பட்டும், திரும்பத் திரும்ப பலகலவர நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுகிற ஒரு குழுவினர் பெயர்கள் போலீசாருக்குத் தெரிவிக்கப்பட்டும், அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படவில்லை.

அக்டோபர் 21, 1960-ல் நுங்கம்பாக்கத்தில் கழக நகரமன்ற உறுப்பினர் திரு. சம்பந்தம் ஒருவரால் தாக்கப்பட்டார்; அவரைத் தாக்கியவர் ஒரு வீட்டிலே சென்று ஒளிந்து கொண்டார். அப்படி ஒளிந்துகொண்டவரைத் தேடிப் பிடிக்க முயற்சித்த மக்கள் அங்கே ஒரு கலவரத்தை உண்டாக்கினார்கள். யார் கலவரத்தை உண்டாக்கியிருந்தாலும், அவர்கள் சார்பிலே கழகத் தோழர்கள்மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டது, கழகத்தோழர் சம்பந்தத்தைத் தாக்கியவர்மீதோ அல்லது கழகத் தோழர்களை தாக்கியவர்கள் மீதோ வழக்கு எதும் பதிவு செய்யப்படவில்லை.

டிசம்பர் 29, 1960-ல் சென்னை 33-வது வட்டம் புளியந்தோப்பில் காங்கிரஸ் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அதில் முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்களும் கலந்துகொண்டார்கள். அந்தக் கூட்டம் நடைபெறுவதற்கு 10 நிமிடங்களுக்கு முன்பு திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் ஆடலரசு முடிதிருத்தகம் தாக்கப்பட்டு, உள்ளே இருந்த பல பொருள்கள் உடைக்கப்பட்டன. கழகத் தோழர் திராவிடத்துரையை பூந்தொட்டியால் அடித்து, அவரைப் படுகாயத்திற்கு ஆளாக்கியிருக்கிறார்கள். அந்த வட்டாரத்திலுள்ள காங்கிரஸ்காரர்கள் சிலர் இதற்குத் தூண்டுதலாக இருந்தார்கள் என்று எடுத்துச் சொல்லியும், அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படவில்லை. சட்டமன்ற உறுப்பினர் திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் இதுபற்றிப் போலீசாருக்குத் தெரிவித்தும் இதுவரைக்கும் வழக்குப் பதிவு செய்யப்படவில்லை.

பெப்ரவரி 5, 1961-ல் 53-வது வட்டத்தில் கழக நகர மன்ற உறுப்பினர் சிட்டிபாபு அவர்கள் வீட்டிற்கு முன்னால், ஒரு காங்கிரஸ் ஊர்வலம் சென்றது. அந்த ஊர்வலத்தில் சென்றவர்கள் கழகத் தோழர் வீட்டைப் பார்த்தவுடன் ஆத்திரத்தினால் வீட்டிற்குள் நுழைந்து அவரைத் தாக்கியிருக்கிறார்கள். இந்த விஷயம் வழக்கில் இருப்பதால் அதை விவரித்துப் பேசுவதற்கு நான் விரும்பவில்லை.

[Sri K. Anbazhagan] [9th March 1961

சென்றது காங்கிரஸ் ஊர்வலம். தாக்கப்பட்டது கழகத் தோழர் வீடு. இதுதான் காந்திஜியின் பெருமையைப்பற்றி பேசுபவர்களுக்கு ஏற்றதா என்பதை அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

**DEPUTY SPEAKER :** இன்னும் அங்கத்தினர் அவர்களுக்குப் பேச நேரம் இரண்டு நிமிஷங்கள்தான் இருக்கின்றன.

**SRI K. ANBAZHAGAN :** எனக்கு நேரம் இல்லாத காரணத்தினுல், காங்கிரஸ் ஆட்சி மீது சாட்டப்படும் குற்றச்சாட்டுகள் குறைந்துபோய்விடும் என்று அமைச்சர் அவர்கள் மகிழ்ச்சி அடையலாம். அமைச்சர் அவர்கள் அதிக நேரம் அநுமதி வாங்கித் தருவார்களேயானுல் நான் குற்றச்சாட்டுகள் முழுவதையும் விளக்குவதற்குக் கடமைப்பட்டிருக்கிறேன்.

குடியரசு நாள் ஊர்வலத்தின்போது சென்னை 66-வது வட்டத்தில் சிந்தாதிரிப்பேட்டை தோழர் பொன்னுசாமி என்பவரும், மற்றும் இருவரும் தாக்கப்பட்டனர். இன்னும் இதுபோன்று பல நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. விவரம் இருக்கிறது.

பாமக்குடி வட்டம் மஞ்சூர் கிராமத்தில் காங்கிரஸ் கூட்டத்தில் கழகத் தோழர்கள் தாக்கப்பட்டார்கள். அவர்கள் சென்று போலீசாரிடம் புகார் செய்தபொழுது போலீசார் நடவடிக்கை எடுக்கவில்லை. மாருக, மறுநாள் காங்கிரசாரிடம் புகார் பெற்றுக்கொண்டு கழகத் தோழர்கள் தாக்கிவிட்டதாகச் சொல்லி, கழகத்தோழர்களைக் கைது செய்து அவர்கள்மீது வழக்குப் போட்டிருக்கிருர்கள்.

சேலம் அம்மாபேட்டையில் முதல் அமைச்சர் அவர்கள் கலந்து கொண்ட ஒரு விழா நடந்தது. அந்த விழா நாளன்று கழகத் தோழர்கள் காங்கிரசாரால் தாக்கப்பட்டார்கள். போலீசாரிடம் புகார் செய்வதற்குச் சென்ற கழகத்தவர்களை—ஒரு கர்ப்பிணி பெண்மணி உள்பட—போலீஸார் தாக்கியிருக்கிருர்கள். நடுத் தெருவிலே இழுத்து வந்து அடித்திருக்கிருர்கள், நாய்களை அடிப்பதுபோல்; மனிதர்களை அடிப்பதுபோல்கூட அல்ல. இதற்கு அமைச்சர் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிருர்கள் என்று எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

குன்றத்தூர் வட்டாரத்தில் படுகொலை நடைபெறும் அளவிற்கு வெட்டுகளும் குத்துகளும் நடைபெற்றன. அதிலே அரசியல் கட்சி சார்புடையவர்கள் ஈடுபட்டதும் அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். தாக்கப்பட்ட தோழர் கழகப் பஞ்சாயத்து உறுப்பினர். அவரும் அவருக்குத்துணையாக இருந்த காங்கிரஸ் நண்பரும் கூடத் தாக்கப்பட்டார்கள். கட்சி வெறியில் இப்படி நடவாதிருக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை.

சீர்காழி வட்டம் மணிக் கிராமத்தில் பல்வேறு கொடுமைகள் நடந்தது அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். அதிலே அரசியல் கட்சிச் சார்பு இருக்கிறது என்பதை ஆராய்ந்து பார்த்தால் தெரிந்து கொள்ளுவார்கள். அண்மையில் இராமநாதபுரத்தில் நகராட்சி மன்ற தி.மு.க. உறுப்பினரும், நகர தி.மு.க. செயலாளருமான திரு. தங்கப்பன்

9th March 1961] [Sri K. Anbazhagan]

என்பவரை யாரோ செய்த புகாரின் பேரில் நள்ளிரவில் கைது செய்து நடுத்தெருவில் இழுத்துக்கொண்டுபோய்ப் பலமாக அடித் திருக்கிறார்கள் போலீசார். மறுநாள் ராமனாதபுரம் பொதுமக்கள் இதற்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் கடைத் தெருவையே மூடி வைத்திருந்தார்கள். இதுபற்றி கலெக்டருக்கும் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. அமைச்சர் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

கீழப்பசலை கம்யூனிஸ்டு நண்பர்கள் அடைந்த வேதனையைப் பற்றிச் சொல்லத்தான் தெரியவேண்டும் என்னும் நிலை இல்லை. 10-30 a.m.

நான் அமைச்சர் அவர்களுக்கு சுருக்கமாகச் சொல்லக்கூடியது, நீங்கள் சென்னையில் முதுகளத்தூரை உண்டாக்க அனுமதிக் கிறீர்கள் என்பதுதான். நான் வேதனையோடு, வெட்கத்தோடு சொல்லுகிறேன். அரசியலில் கீழ்த்தரமான முறையைத் தயவு செய்து உண்டாக்க வேண்டாம். அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் சொல்லி, இவை நடக்கிறதாக நான் குற்றம் சாட்டவில்லை. காமராஜ் அவர்கள் சொல்லி நடக்கிறதாகக் குற்றம் சாட்டவில்லை. இன்றைய தினம் காங்கிரசுக்குள்ளேயே மிக மட்ட ரகமானவர்கள் சிலர் புகுந்திருக்கிறார்கள். ரௌடித்தனத்தைத் தொழிலாக கொண்டிருப்பவர்கள் சிலர் புகுந்திருக்கிறார்கள். அவர்கள் இப்படிப்பட்ட தவறு செய்கிறார்கள். அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்காமல் . . . . . . . . . .

SRI T. KARIA GOUNDER : On a point of order, Sir. 'மட்டரகம்' என்று கூறுகிறார்களே, அந்தமாதிரி வார்த்தையை உபயோகிக்கலாமா? 'ரௌடித்தனம்' என்ற வார்த்தை அரசியல் சட்டத்திற்கு உட்பட்ட வார்த்தையா? கனம் அங்கத்தினர் அவர் கள் இந்த வார்த்தைகளை வாபஸ் வாங்கிக்கொள்ளும்படி கனம் சபாநாயகர் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : கனம் அங்கத்தினர் மட்டரகமான மெம்பர்கள் என்று சொல்லவில்லை. அம்மாதிரி உள்ளவர்கள் காங்கிரஸில் சேர்ந்திருக்கிறார்கள் என்றுதான் சொன்னார். Anyway, the hon. Member should not use those words.

SRI K. ANBAZHAGAN : நான் சொல்லுவது, பண்புமிக்க காங்கிரஸ்காரர்களுக்கு இழுக்குத் தேடித்தரும்வகையில் சிலர். காங்கிரஸின் பெயராலே தவறு செய்கிறார்கள். அதுவே தொழி லாகக் கொண்டிருக்கிறார்கள். அதைத் தடுப்பதற்கு அமைச்சர் அவர்கள் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். . . . . . . . . *

DEPUTY SPEAKER : The hon. Member should not refer to the names of persons who are not Members of this House.

SRI K. ANBAZHAGAN : பல்வேறு தலைவர்களின் பெயரைப் பயன்படுத்தி இந்த முறையில் தவறு நடக்கிறது. . . . . . .

(பல அங்கத்தினர்கள் எழுந்திருந்தார்கள்)

DEPUTY SPEAKER : Order, Order. I have already ruled that the hon. Member should avoid reference to persons who are not Members of this House.

* Expunged as ordered by Chair.

[9th March 1961

SRI S. LAZAR : The hon. Members must withdraw those remarks, Sir.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்கள் சொன்ன கருத்தை நான் ஏற்கிறேன் . . . * பதவி உயர்வை நாடி . . . தவறு செய்வதில் ஈடுபடுகிறார்கள் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் சிலர். காவல்துறையில் உயர்தரமான பண்புடன் நடக்கிறவர்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய திறமை எனக்குத் தெரியும். ஆனால், சிலர் முறைப்படி நடவடிக்கை எடுப்பதற்கு அஞ்சுகிறார்கள். இது அரசியல் நாகரிகமல்ல, ஜனநாயகத்திற்கேற்றது அல்ல. இப்படிப்பட்ட பிரச்னைகளின் மீது போலீஸ் அமைச்சர் அவர்கள் ஒரு விசாரணை நடத்த விரும்பினால், இவைகளுக்கான விளக்கமான வாக்கு மூலம் தேவை என்று கருதி, பொதுமக்களை அழைத்து விசாரணை செய்வதாயிருந்தாலும், நான் உரிய முறையில் அந்த விசாரணைக்கு ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறேன். அரசியலின் பெயரால் இம்மாதிரி தவறுகள் நடக்காமல் கண்காணிக்க அமைச்சர் அவர்கள் முயற்சிக்க வேண்டும் என்பதற்காகத்தான் நான் என்னுடைய வெட்டுத் தீர்மானத்தை தந்திருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் பொறுப்போடு ஆராய்ந்து பார்த்து மனச் சான்றுக்கொப்ப பதில் அளிக்கவேண்டுமென்று வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI S. LAZAR : Sir, the Chair has rightly pointed out that the hon. Member should not refer to individuals. Now that he had already mentioned it and it has gone into records also, I suggest that it may be expunged.

SRI M. P. SUBRAMANIAM : It is not unparliamentary as to be expunged.

DEPUTY SPEAKER : I think it is not necessary.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the hon. Member has referred to persons who are not hon. Members of this House and it may be expunged from the records.

DEPUTY SPEAKER : Yes, it will be expunged.

(The hon. Member Sri K. Anbazhagan rose)

DEPUTY SPEAKER : The point of order has been raised and I have given the decision. I hope the hon. Member will resume his seat.

SRI R. CHIDAMBARA BHARATHI : Sir, on a point of personal explanation.

DEPUTY SPEAKER : Now the hon. Member cannot rise on a point of personal explanation. He should resume his seat.

* **SRI T. L. SASIVARNA THEVAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கொஞ்சம் காரசாரமாகவே நிலைமை இங்கே முற்றிக் கொண்டே போகிறது. இன்னும் முற்றவிட வேண்டாமென்று

---

* Expunged as ordered by Chair.

9th March 1961] [Sri T. L. Sasivarna Thevar]

கேட்டுக்கொள்கிறேன். நான் சொல்லப்போகும் குற்றச்சாட்டுகளை விசாரிக்கவேண்டுமென்பதற்காகத்தான் சொல்லுகிறேன். ஆகவே என்னுடன் சண்டை போடவேண்டாமென்று கேட்டுக்கொள் கிறேன்.

இந்த மான்யம் மிகவும் முக்கியமானதொரு மான்யம். போலீஸ் இலாகாவானது நமது சர்க்காரிலேயே தலைமையான ஒரு இலாகா. இந்த இலாகா சரிவர செயல்படவில்லை என்றால், அதனால் எல்லோருக்கும் குந்தகம் ஏற்படுமென்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். வெட்டுப் பிரேரபணையிலேயே நான் சொல்லியிருக்கிறேன். ஆளும் கட்சியிலே உள்ளவர்கள் போலீசைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். அதற்கு ஆதாரவாக சில சான்றுகளை எடுத்துச் சொல்ல விரும்பு கிறேன். என்னுடைய தொகுதியில் நடந்த சில காரியங்களை வைத்துத்தான் நான் இதைச் சொல்லுகிறேன். மற்ற இடங்களில் இந்த இலாகா எப்படிச் செயல் படுகிறது என்பதற்கு என்னிடம் ஆதாரம் இல்லை. அண்மையில் எங்கள் பகுதியில் நடந்த மகத்தான கலவரங்கள் எல்லோருக்கும் தெரியும். இந்தக் கலவரங்களை உண்டாக்கியவர்களே இந்தக் காங்கிரஸ்காரர்கள்தான் என்பது என்னுடைய குற்றச்சாட்டு. இந்தக் குற்றச்சாட்டு எந்த நீதிபதியினாலாவது விசாரிக்கப்பட்டு, இல்லை என்று நிரூபிக்கப் படவில்லை. மழை ஓய்ந்தும் தூவானம் ஓயவில்லை என்கிற மாதிரி இந்தக் கலவரங்கள் ஒழிந்தும் இன்னும் அங்கே பூரண அமைதி ஏற்படவில்லை. இந்த அடக்குமுறை சூழ்நிலை கடைசிவரையில் இருந்து கொண்டிருக்கிறது என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஆட்சியாளர்கள் போலீஸ் நிர்வாகத்தை மூன்று வகையிலே உபயோகித்து வருகிறார்கள். முதல்வகை என்னவென்றால், காங்கிரஸ்காரர் என்ன தவறு செய்தாலும், காங்கிரஸ்காரர் என்பதற்காக அவர்மீது வழக்குத் தொடரப்படவில்லை. இதைப்பற்றி என்னிடத்தில் பல குற்றச்சாட்டுகள் இருக்கின்றன. அதைப்பற்றி பூராவும் இங்கே பேசுவதற்கு எனக்கு நேரம் கொடுக்கப்படவில்லை. ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். எமானியுவேல் கொலைக் கேசு நடந்தது. அந்தக் கொலைக் கேசுலே இரண்டு காங்கிரஸ்காரர்கள் சாட்சியம் கூறினார்கள். அந்த இரண்டு பேரும் அந்த ஊரிலே புறம்போக்கு நிலத்திலிருந்த பஞ்சாயத்து போர்டுக்குச் சொந்தமான மரத்தை வெட்டி விற்றுவிட்டார்கள். பஞ்சாயத்து போர்டு தலைவர் போலீசுக்குத் தகவல் கொடுத்தார். போலீசாரும் விசாரணை செய்து அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க சார்ஜ் ஷீட் போடக் கூடிய நிலைமையிலே இருந்தது. அந்த சந்தர்ப்பத்திலே திருப்பத்தூரிலே ஒரு அரசியல் மாநாடு நடந்தது. அந்த மாநாட்டிற்கு நமது மதிப்பிற்குரிய முதல் அமைச்சர் அவர்கள் வந்திருந்தார்கள். அந்த மாநாட்டிற்கு அந்த இரண்டு காங்கிரஸ்காரர்களும் சென்றிருந்தார்கள். அது முடிந்ததும், இரண்டு தினங்களுக்குப் பிறகு, சென்னையிலிருந்து ஒரு ஸி.ஐ.டி. போலீஸ்காரர் முதுகளத்தூருக்கு வந்து, அந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட ரிகார்டுகளை அவரிடம் ஒப்படைக்கவேண்டுமென்று சொல்லவே, அதன்படி

[Sri T. L. Sasivarna Thevar] [9th March 1961

அந்த ரிகார்டுகள் அவரிடம் ஒப்புவிக்கப்பட்டன. அந்த வழக்கும் தொடரப்படாமல் கைவிடப்பட்டது. ஆனல் அதே சமயத்தில் புகார் கொடுத்த அந்த பஞ்சாயத்துத் தலைவர் மீதும் இன்னும் சில நபர்கள் மீதும் ஜாமின் வழக்குகள் தொடரப் பட்டன. காங்கிரஸ்காரர்கள்மீது வழக்குப் போடப்படவில்லை. வாபஸ் பெறப்பட்டது. ஆனல் புகார் கொடுத்தவர்கள் மீது ஜாமின் வழக்குப் போடப்பட்டது. இதைப் பார்க்கும்பொழுது எனக்கு என்ன சொல்லுவது என்றே புரியவில்லை.

எதிர்க்கட்சியினரைத் துன்புறுத்தக்கூடிய விஷயத்திலே போலீஸ்காரர் கொஞ்சம்கூட பின்தங்கியது இல்லை. என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால் போலீஸ் அதிகாரிகள் மிகவும் கொடுமையான முறையில் நடந்துகொண்டிருக்கிறார்கள்.

நரிக்குடி போலீஸ் ஸ்டேஷனிலே ஒருநாள் இரவு ஒன்று அல்லது ஒன்றரை மணி இருக்கும். அந்த சந்தர்ப்பத்தில் அந்த கிராமத் திலே இருக்கக்கூடிய எங்கள் கட்சி ஊழியர் ஒருவரைத் திடீ ரென்று ஜீப்பில் அழைத்துச் சென்று படுமோசமாக போலீஸ் ஸ்டேஷனிலே வைத்து அடித்துவிட்டார்கள். அடிக்கப்பட்டவர் எதற்காக அடித்தார்கள் என்று காரணம் கேட்டபொழுது, அங்கிருந்து ஒரு காங்கிரஸ்காரர் யாரோ ஐ.-ஜிக்கு நேரடியாகப் புகார் செய்து, அங்கேயிருந்து தந்தி வந்திருக்கிறது, அந்தத் தந்தியின் மீது நடவடிக்கை எடுக்காவிட்டால் என்மீது குறை ஏற்படும் என்பதற்காக உன்னை அழைத்து வந்து அடித்தேன் என்று சொன்னாராம். புகார் என்ன, எதற்காக அவர் அடிக்கப் பட்டார், இந்த சமாசாரமெல்லாம் இதுவரையிலும் தெரியவில்லை. அதே சப்-இன்ஸ்பெக்டர் கொஞ்ச காலத்திற்கு முன்பு எங்கள் தொகுதியைச் சேர்ந்த கள்ளர்குளம் என்ற ஊரிலே எவ்விதக் குற்றமும் செய்யாத ஒரு சிலரைத் துன்புறுத்தியிருக்கிறார். டெபுடி சூப்பிரண்டு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர், சப்-இன்ஸ்பெக்டர் ஆகிய மூன்று பேரும் ஒரு எஸ்.ஏ.பி. பார்ட்டியை அழைத்துக் கொண்டுபோய் சுமார் 6 மணியிலிருந்து 7 மணிக்குள் ஒரு சிலரை அடித்து மிகவும் நிர்த்தாட்சண்யமாக துன்புறுத்தி யிருக்கிறார்கள். இதைப்பற்றி உடனே புகார் செய்யப்பட்டது. இரண்டு பேர்கள் பலமாகத் தாக்கப்பட்டு மதுரை எர்ஸ்கின் ஆஸ்பத்திரியிலே சிகிச்சை செய்யப்பட்டார்கள். அந்த போட் டோகூட நான் இதோ வைத்திருக்கிறேன். சபாநாயகர் மூலமாக அதை அமைச்சருக்குக் கொடுக்கிறேன் (கனம் அங்கத்தினர் இரு போட்டோவை போலீஸ் அமைச்சரிடம் கொடுத்தார்). அவ் விரண்டு பேரும் போலீஸ் ஸ்டேஷனுக்கே போகாதவர்கள். அந்த இரண்டு பேரில் ஒருவர் பெரிய விவசாயி. வருஷத்திற்கு 15,000 ரூபாய் வருமானம் உடையவர். 160 அல்லது 180 கிஸ்தி செலுத்தக் கூடியவர். எவ்வித காரணமும் இல்லாமல் கை நொண்டியாக்கப் பட்டிருக்கிறார். இதைப்பற்றி கலெக்டருக்குப் புகார் செய்யப் பட்டது. ஐ.ஜி.-க்கு தந்தி அனுப்பப்பட்டது. நாளது வரையில் என்ன ஆயிற்றோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்.

இதுமாதிரி பல உதாரணங்கள் என் கையில் இருக்கின்றன. அதைப் பூராவும் இங்கே சொல்லுவதற்கு நேரம் இல்லை.

9th March 1961] [Sri T. L. Sasivarna Thevar]

மூன்ருவது வகை என்னவென்ருல், இந்தக் காங்கிரஸ் ஸ்தாபனம் போலீஸ் நிர்வாகத்தை எப்படி உபயோகித்துக் கொள்கிருர்கள் என்பதுதான். என்னுடைய தொகுதி, கமுதியிலே ஒரு அரசியல் மகாநாடு நடந்தது. இதற்கு முன்பு 15 வருஷங்களுக்கு முன்புதான் அங்கே மகாநாடு நடந்தது. அப்பொழுது நாங்கள் காங்கிரஸ்காரர்களாய் இருந்தோம். அந்த மகாநாட்டிற்கு நமது மதிப்பிற்குரிய முதலமைச்சர் வந்திருந்தார். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் மும்முரமாக நடந்தன. இரண்டு மாதங்களுக்கு முன்பே போலீசார் வந்திருந்தார்கள். மகாநாடு நடந்தது. முதல் அமைச்சர் வர்க்கத்தைச் சேர்ந்த கோஷ்டியார்கள் இருக்கிருர்களே அவர்களுடைய பாதுகாப்புக்காக போலீஸ் வந்தது. அதைப்பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை.

THE HON. SRI K. KAMARAJ : ஜாதியைப்பற்றிப் பேசுகிருர். அவருடைய ஜாதி, நம்முடைய ஜாதி என்றெல்லாம் குறிப்பிடுகிருர்.

SRI T. L. SASIVARNA THEVAR : எதற்காகக் குறிப்பிடுகிறேன் என்ருல், இந்த மகாநாடு உங்களுக்கு வேண்டிய வர்க்கத்தினர் இருந்த இடத்தில் நடத்தப்பட்டது. அவர்களுக்குப் போலீஸ் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. உங்களுக்கு பயம் இருக்கலாம். ஏனென்ருல் 10, 16 பேர்களை சுட்டிருக்கிறீர்களே இந்த பகுதியிலே.

THE HON. SRI K. KAMARAJ : எங்களுக்கு ஒன்றும் பயம் கிடையாது. எவன் பண்ணினுனே? நாங்கள் ஏன் பயப்பட வேண்டும்?

SRI T. L. SASIVARNA THEVAR : அந்த மகாநாட்டிற்கு எங்கள் தாலுகாவிலிருந்து 15 அல்லது 20 காங்கிரஸ்காரர்கள் டெலிகேட்டாகப் போயிருந்தார்கள்.

THE HON. SRI K. KAMARAJ : மகாநாட்டை நடத்திவிட்டார்களே என்று இப்படிச் சொல்லுகிருர்.

SRI T. L. SASIVARNA THEVAR : அந்தமாதிரி நோக்கத்தில் நான் சொல்லவில்லை. நீங்கள் நன்ருய் மகாநாடு நடத்தலாம். உங்கள் ஆர்ப்பாட்டத்தைக் காட்டுவதற்கு நடத்துங்கள். எனக்கு ஆட்சேபணை இல்லை. என்ன நடந்தது என்பதைத்தான் நான் சொல்ல விரும்புகிறேன். அங்கே வந்திருந்த 100 அல்லது 150 ஸி.ஐ.டி. போலீஸ்காரர்களுக்கு, தலைக்கு 25 ரூபாய்க்கு கதர் வாங்கிக்கொடுத்து, அவர்கள் எல்லோரும் டெலிகேட்டாக மகாநாட்டிற்கு வந்தார்கள். போலீஸ்காரர்கள் அந்த மகாநாட்டிற்கு டெலிகேட்டுகளாக வந்தார்கள் என்பதைத்தான் சொல்லுகிறேன்.

SRI S. LAZAR : அதற்கும் போட்டோ வைத்திருக்கிறீர்களா (சிரிப்பு).

SRI M. P. SUBRAMANIAM : On a point of order . . . .

DEPUTY SPEAKER : I request hon. Members not to interrupt the speech of the hon. Member.

[9th March 1961

**Sri M. P. SUBRAMANIAM** : சட்டமன்றத் தலைவர் அவர்களே, கனம் உறுப்பினர் அவர்கள் பேசிக்கொண்டு இருக்கும் போது, மதிப்பிற்குரிய முதல் அமைச்சரவர்கள் அவர்பாட்டுக்கு பேசிக்கொண்டே இருந்தால் அது சரியா ?

**DEPUTY SPEAKER** : பாயிண்ட் ஆப் ஆர்டர் ஒன்றுமில்லை.

Sri M. P. SUBRAMANIAM : Sir, how is it relevant? He is going on interrupting the speech of the hon. Member.

DEPUTY SPEAKER : He is speaking **slowly.**

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்த மன்றத்திலே ஒரு கனம் அங்கத்தினர் பேசும்போது, எத்தனையோ பேர்கள் குறுக்கிடுகிறார்கள். நான் ரஷ்யாவில் ஒரு மன்றத்தைப் பார்த்தேன். அங்கே நிசப்தமாக இருந்தது. அங்கேபோல் இங்கே நிசப்தமாக இருப்பதற்கில்லை. இதில் பாயிண்ட் ஆப் ஆர்டர் ஒன்றுமில்லை. (கனம் ஸ்ரீ கே. காமராஜ் அவர்கள் பேசுவது அவர்களுக்குப் பிடிக்கவில்லைபோல் இருக்கிறது).

**Sri S. M. ANNAMALAI** : On a point of order. சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ரூலிங் கொடுப்பது ஸ்பீக்கரா அல்லது அமைச்சரா? அவர்கள் பாயிண்ட் ஆப் ஆர்டர் இல்லை என்கிறாரே?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பாயிண்ட் ஆப் ஆர்டரைப்பற்றிச் சொல்வதற்கு எனக்கும் உரிமை உண்டு.

DEPUTY SPEAKER : The Hon. Minister has a right to express his views but the Chair will finally decide it.

**Sri T. L. SASIVARNA THEVAR** : சபைத் தலைவர் அவர்களே, இந்த நேரத்தையெல்லாம் சேர்த்துக் கொடுக்கவேண்டும் .

DEPUTY SPEAKER : Yes, I will give two more minutes.

**Sri T. L. SASIVARNA THEVAR** : அடுத்தபடியாக அமைச்சர்கள் சுற்றுப் பிராயணம் செய்வது ஜாஸ்தியாக இருக்கிறது. அடிக்கடி பல இடங்களுக்கும் வருகிறார்கள். அப்பொழுதெல்லாம், போலீஸ்காரர்களை நிறைய உபயோகிக்கிறார்கள். அது வேண்டியதில்லை. மதுரை சம்மந்தப்பட்டவரை நான் சொல்லுகிறேன். முன்பெல்லாம், வெள்ளைக்கார கவர்னர்கள் வரும்போது அம்மாதிரி போலீஸ்காரர்கள் ஏற்பாடுகளெல்லாம் செய்வார்கள்; எங்கு பார்த்தாலும் நிற்பார்கள். இப்பொழுது பார்த்தால், தினசரி அம்மாதிரி நிற்கிறார்கள். அவரிடம் யாராவது ஒரு மத்திய சர்க்கார் மந்திரியோ மற்றவர்களோ, யாராவது ஒருவர் வந்த வண்ணமாகவே இருக்கிறார்கள். ஆகவே, போலீஸ்காரர்கள் எப்பொழுதும் நின்றுகொண்டே இருக்கிறார்கள். ஒரு அமைச்சர் இன்றையதினம் ஒரு இடத்திற்கு வருகிறார்கள் என்றால், அங்கே உள்ள டி. எஸ். பி. முதல் ஒரு சிறிய உத்தியோகஸ்தர் வரை எல்லோருமே காக்காய் பிடிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். மந்திரி

9th March 1961] [Sri T. L. Sasivarna Thevar]

களின் பந்தோபஸ்திற்காக வேண்டுமென்றால், அதற்கென்று ஒரு தனி இலாகாவையே வேண்டுமானால் ஏற்படுத்தி, ஜில்லாதோறும் ஒரு டி.எஸ்.பி.-யைப் போட்டு, அதற்கென்று சில போலீஸ் லாரிகள், 5, 6, 10 ஜீப்புகள் இவற்றைக் கொடுத்து, அவர்கள் காரியங்களை, பந்தோபஸ்து சம்பந்தமாகக் காரியங்கள் என்ன உண்டோ அவற்றையெல்லாம் செய்ய வைத்துவிட்டால், மற்ற வேலைகளைச் செய்ய போலீஸ்காரர்களுக்கு போதிய நேரம் கிடைக்கும் . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பிரத்தியேகமாக ஒரு இலாகா அமைக்க வேண்டியதில்லை. அங்கத்தினர் சம்பந்தப் பட்ட ராமநாதபுரத்தில்தான் இன்னொரு டி.எஸ்.பி.—மொத்தம் இரண்டு டி.எஸ்.பி.-கள் வைக்க வேண்டிய நிமித்தம் ஏற்பட்டது.

SRI T. L. SASIVARNA THEVAR : அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. எவ்வளவு டி.எஸ்.பி. வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். அதிகப்படி அதிகாரிகள் போடுவதற்கு நாங்கள் சொல்லும் காரணங்கள் வேறு. நீங்கள் சொல்லும் காரணங்கள் வேறு.

பொதுக் கூட்டங்கள் போடும் காலங்களில், போலீஸ்காரர்கள் பேரிலேயே அந்த முழுப் பொறுப்பும் சுமத்தப்படுகிறது, அது நகர காங்கிரஸ் கமிட்டியானாலும் சரி, மண்டல காங்கிரஸ் கமிட்டி யானாலும் சரி, கூட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்வது போலீஸ்காரர்கள்தான். (குறுக்கீடு.) நான் கண்ணால் பார்த்ததைச் சொல்லுகிறேன். ஒரு கூட்டம் நடந்தது; முதல் அமைச்சர் அதில் பேசினார்கள் ; மேடை, அதைச் சுற்றி மூங்கில் தடுப்பு; அங்கெல்லாம் சுற்றி நின்றவர்கள் ரிசர்வ் போலீஸ்காரர் கள். ஏற்கனவே சொன்னபடி அவர்கள் கதர் சட்டைப் போட்டுக் கொண்டு, போலீஸ்-காங்கிரஸ்காரர்களாக விளங்கினார்கள். அதை அடுத்து எஸ்.ஏ.பி. படை. அதை அடுத்து மண்டல காங்கிரஸ் காரர்கள். அதற்கும் அப்பால், பொதுமக்கள். ஆகவே, கட்சி சார்பான கூட்டங்களில்கூட போலீசாரே இப்படி நடத்துகிறார்கள். போலீசார் அம்மாதிரி உபயோகிக்கப்படுகிறார்கள். இம்மாதிரி வருஷா வருஷம் செய்கிறார்கள். எங்களுக்கும் அந்த மாதிரி சலுகை கொடுத்தால், நாங்களும் அவர்களை வேலைவாங்கி, கூட்டங் கள் போட்டு . . .

DEPUTY SPEAKER : The hon. Member has got one more minute.

SRI T. L. SASIVARNA THEVAR : ஆகவே, இந்த மூன்று குற்றச் சாட்டுகளைச் சாட்டுகிறேன், ஒன்று, காங்கிரஸ்காரர்கள் சம்பந்தப்பட்ட வழக்குகளில், கேஸ் தொடரப்படுவதில்லை. இரண் டாவது குறை, எதிர்க் கட்சிக்காரர்களிடம் அடக்கு முறையைக் கையாள்கிறார்கள்; மூன்றாவது குறை, போலீஸ்காரர்களை கட்சிக் காரியங்களுக்கு, கட்சிச் செல்வாக்கிற்கு உபயோகிக்கிறார்கள் என்பது. ஆக, இந்த மூன்று குறைகளையும் பரிசீலனை செய்ய வேண்டும் . . . (ஒரு அங்கத்தினர்: நீங்கள் ஆட்சிக்கு வந்தால்?) நாங்கள் வரும்போது, போலீஸே இல்லாத நிலைமை

ஏற்படும். ஆகவே, இவற்றைப் பரிசிலனை செய்யவேண்டும். நேற்றையதினம் பேசும்போது, கனம் நிதியமைச்சர் சொன்னுர்கள், எலெக்ஷனுக்கு ஆறு மாதத்திற்கு முன்பிலிருந்து அதிகாரிகளை அழைத்துப் போகாமல் இருப்பதுபற்றி யோசனை செய்கிறேம் என்று சொல்லியிருக்கிருர்கள். அதிலிருந்து அவர்கள் இதைப் பரிபூரணமாக ஒப்புக்கொள்ளுகிருர் என்றுதான் அர்த்தம். *(கனம் ஸ்ரீ கே. காமராஜ்: அவர்கள் என்ன சொன்னுர்கள்? எனக்குத் தெரியவில்லையே!)*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் நிதியமைச்சர், தேர்தல் காலத்தில் தேர்தலுக்காகவே சொல்லும் போது இவர்களை அழைத்துப் போகமாட்டோம் என்று சொல்லியிருக்கிருர்கள். கனம் அங்கத்தினருக்கு அவர்கள் சொன்னது புரியவில்லை என்பதைக் காண எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

SRI T. L. SASIVARNA THEVAR: பிரசார காலத்திலும் உபயோகிக்கக்கூடாது என்றுதான் சொல்லுகிறேம்.

இந்த மான்யத்தின்மீது நான் சொல்லியிருக்கும் மூன்று குறைகளையும், இந்தக் குற்றச் சாட்டுகளையும்பற்றி பதில் சொல்ல வேண்டும். குற்றங்கள் புரிந்தவர்களை மாற்ற வேண்டுமென்றல் கூட மாற்றுவதில்லை என்றல் அவர்கள் மேலும் மேலும் குற்றங்களைச் செய்ய தூண்டுதலாக அது இருக்கிறது என்று, இந்த குற்றச் சாட்டுகளைச் சொல்லிக்கொண்டு என் பேச்சை முடிக்கிறேன்.

SRI R. CHIDAMBARA BHARATHI: ஒரு சந்தேகம் விளக்கம் வேண்டும், ஸார்.

DEPUTY SPEAKER: சந்தேகத்திற்கு விளக்கமே தேவையில்லை. மந்திரி இருக்கிருர்கள் பதில் சொல்ல. அடுத்தது கனம் திரு. கல்யாணசுந்தரம் பேசுவார்.

SRI M. KALYANASUNDARAM: ஸார், நான் பேசுவதற்கு முதலில் போட்ட திட்டப்படி நேரம் கிடைக்கவில்லை. ஆகவே, மந்திரியவர்களின் நேரத்தைக் குறைத்துக் கொண்டாவது எனக்குப் போதிய நேரம் கொடுக்க வேண்டும்.

DEPUTY SPEAKER: The hon. Member can speak up to 11-10 a.m.

SRI M. KALYANASUNDARAM: போலீஸ் மானியத்திற்குப் பணம் ஒதுக்குவதைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று வெட்டுப் பிரேரணை கொடுத்திருப்பதால், போலீஸ் மானியத்திற்குப் பணம் ஒதுக்க வேண்டாம் என்பதல்ல பொருள்; நம்மிடம் வர்க்கபேதமுள்ள சமுதாயம் உள்ள வரையில், நிலப்பிரபுக்கள், விவசாயிகள், முதலாளிகள், தொழிலாளிகள் என்று இப்படி வர்க்க பேதம் இருக்கும் வரை, ஜாதி வித்தியாசங்கள் இருந்து ஜாதி வெறி தாண்டவமாடும் சமுதாயம் இருக்கும் வரை, வர்க்க பேதமற்ற ஜாதி பேதமற்ற சமுதாயம் இருக்கும் வரை

9th March 1961] [Sri M. Kalyanasundaram]

திறமையான போலீசுக்கு அவசியம் கட்டாயம் உண்டு. ஆனால், பணி புரிவது எப்படி என்றுதான் சிந்திக்க வேண்டும். போலீஸ் அங்கே, இங்கே சரியாக நடக்கவில்லை என்று பல குற்றங்கள் எதிர்க் கட்சியின் சார்பில் கூறப்பட்டது. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள், அநேகமாக பாராட்டையே தெரிவித்தார்கள். போலீசார் பொறுப்பு என்ன, அரசியல் வாதிகளின் பொறுப்பு என்ன என்று சிந்திக்க வேண்டும். நமக்குள்ளே, அரசியலில் ஒரு கோட் ஆப் டிஸிப்ளினை ஏற்படுத்திக்கொண்டு, சமுதாயத்தில் என்ன லட்சியத்தை, மாறுதலை ஏற்படுத்த வேண்டும் என்று விரும்புகிறேமோ, அந்த மாறுதலை நல்ல முறையிலே நிறுவ போலீஸ் துறை மட்டுமல்ல, மற்ற ஒவ்வொரு துறையையும், பயன் படுத்த வேண்டும் என்ற நோக்கம் ஏற்படும்; போலீஸ் துறையின ரைப்பற்றி குற்றச் சாட்டுகளை வரவேற்றுப் பரிகாரம் தேடு வார்கள்.

ஒரு அம்மையார் பேசினார்கள், கம்யூனிஸ்டுகள் ஐந்தாம்படை இயக்கத்தைக் கண்காணிக்கிறார்கள் என்று; பொதுக் கூட்டத்தில் பேசி, அதேமாதிரி இங்குப் பேச வந்துவிட்டார்கள். கனம் அமைச்சர் அவர்களும், உதவி சபாநாயகர் அவர்களும் கேட்டுக் கொண்டு இருந்தார்கள். அப்படி இந்த சபையில், அவ்வளவு மோசமான குற்றச்சாட்டை ஒரு எம்.எல்.ஏ. சிந்திக்காமல் பேசும் போது, அரசியல் அமைதி, கட்சிகளுக்குள்ளே நல்லுறவு எப்படி ஏற்படும்? எங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் மோசமாகப் பேசாமல், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களைக் காரணமின்றித் தாக்காமல் நாங்கள் கட்சியில் கண்டிக்கிறோம். கட்சிக் கூட்டத் தில் அதைத் தெரிவிக்கிறோம். ஆதாரம் இல்லாமல், மோசமான முறையில் தாக்கக்கூடாது என்று தெரிவிக்கிறோம். மீறிச் செய் தால், கட்சி ஆதரிப்பதில்லை, உதவி செய்வதில்லை. அது கட்சியின் கொள்கை என்று திட்ட வட்டமாகச் சொல்லுகிறோம். அதைப் பற்றி ஒவ்வொரு கட்சியும் சிந்திக்க வேண்டும். அதில் ஆளும் கட்சிக்குப் பொறுப்பு அதிகம். அதை அமைச்சர்களும், காங்கிரஸ் அங்கத்தினர்களும் உணர வேண்டும். இவர்கள் ஒரே நோக்கோடு போலீசைப் பயன்படுத்தி, சுய நலத்திற்கு உபயோ கிக்க, அந்தக் கட்சியில் சேர்ந்தால் செய்யலாம் என்று அதில் புகுந்துகொண்டு, கட்சிப் பொறுப்பாகச் செய்கிறார்கள் இந்த ராஜ்யத்தில் என்று சொல்லுகிறேன்.

(ஸ்ரீ எஸ். நாகராஜ மணிகார் எழுந்தார்.)

தயவுசெய்து நான் பேசும்போது குறுக்கிட வேண்டாம். மற்ற அங்கத்தினர்களுக்குப் பேசுவதற்கு உரிமை இருப்பது போன்று எனக்கும் பேசுவதற்கு உரிமை உண்டு. ஏதாவது அர்த்த பூர்வ மாகக் குறுக்கிடுவதாக இருந்தால் அதை நான் வரவேற்கிறேன். ஆனல் நான் பேசும்போது மட்டம் தட்டி மடக்க வேண்டும் என்ற எண்ணத்தில் குறுக்கிட்டுப் பேசுவதாக இருந்தால் அதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். விசேஷமாக அர்த்தத்தோடு அவசிய மாகப் பேசவேண்டுமானல் பேசலாம்.

[Sri M. Kalyanasundaram] [9th March 1961

எங்கள் கட்சி ஒரு கட்சியைப்பற்றி மட்டும் அல்ல, திராவிட முன்னேற்றக் கழகக் கட்சி, இராமநாதபுரம் ஜில்லாவில் நடைபெற்றது, மற்ற ஒவ்வொரு ஜில்லாவிலும் நடைபெறுகின்ற சம்பவங்கள் இவைகளையெல்லாம் கவனிக்க வேண்டும். செங்கல்பட்டு ஜில்லாவில் நடைபெற்ற சம்பவத்தையும் கவனிக்க வேண்டும். அதுமட்டுமல்ல. தமிழ் நாட்டிலேயே ஒவ்வொரு ஜில்லாவிலும் நடைபெறுகிற சம்பவங்களை நன்ருகக் கவனிக்கவேண்டும். பல உதாரணங்களை என்ருல் எடுத்துக்காட்ட முடியும். இவ்வளவு உதாரணங்களை எடுத்துச் சொல்வதனுல் நான் போலீஸ் நிர்வாகத்தைப்பற்றிக் குறை கூறுவதாக அர்த்தம் அல்ல. போலீஸ் அதிகாரிகள் எப்படி நடந்துகொள்ளுகிருர்கள் என்பதைப்பற்றியும் கட்சி அடிப்படையில் அவர்களை எப்படிப் பயன்படுத்திக்கொள்ளுகிருர்கள் என்பதைப்பற்றியும்தான் குறை கூற வேண்டியதாக இருக்கிறது. போலீஸ்காரர்களை ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் எவ்வளவோ அலைக்கழிக்கிருர்கள். அவர்களை "டிமாரலைஸ்" பண்ணி விடுகிருர்கள். அந்த வார்த்தையைத்தான் உபயோகப்படுத்தலாம். வேறு சரியான வார்த்தையை உபயோகப்படுத்துவதற்கு இல்லை. அவர்களுடைய கடமையைச் சரியாகச் செய்ய விடுவதில்லை. எவ்வளவோ போலீஸ் அதிகாரிகள் நல்லவர்களாகவும் தங்களுடைய கடமையைச் செய்யக் கூடியவர்களாகவும் இருக்கிருர்கள். அவர்களையெல்லாம் சரியானபடி அவர்களுடைய கடமைகளைச் செய்ய விடுவதில்லை. அந்த நிலைமையில் இன்றைய தினம் போலீஸ் நிர்வாகம் இருந்து கொண்டிருக்கிறது. முதுகுளத்தூர் சம்பவத்தை நாம் மறக்க முடியாது. ஒவ்வொரு ஜில்லாவையும் எடுத்துப் பார்த்தால் இப்படித்தான் இருக்கிறது. இளைஞர் காங்கிரஸ் என்று சொல்லக் கூடியவர்கள்தான் இந்த போலீஸ் அதிகாரிகளுக்கு தொந்தரவு கொடுக்கிருர்கள். மாணவர்களை அரசியலில் ஈடுபடுத்தக் கூடாது என்று சொல்லிக்கொண்டிருக்கும் போது இளைஞர் காங்கிரஸ் என்ற பெயரால் மாணவர்களை ஈடுபடுத்துகிருர்கள். இளைஞர் காங்கிரஸ் கட்சியிலுள்ளவர்கள் என்ன செய்தாலும் நடவடிக்கை எடுத்துக்கொள்வது இல்லை. எதிர் கட்சிகள் தவறு செய்தால் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியதுதான். ஆனல் அவர்கள் தவறு செய்யாவிட்டாலும் அவர்கள் தவறுகள் செய்ததாகச் சொல்லி அவர்களுக்கு தொந்தரவுகளைக் கொடுக்கிருர்கள். கொள்ளை, கொலை முதலிய சம்பவங்களைப்பற்றி போலீஸ்காரர்கள் வழக்கு தொடருகிருர்கள். அது வழக்கம்போலவே இருக்கிறது. அவர்களுடைய திறமையை அதில் காட்டுகிருர்கள். பிரமாதமாக ஒன்றும் அதிகப்படியான திறமையைக் காட்டவில்லை. அல்லது மோசமாகவும் இல்லை. எப்பொழுதும் போய்க்கொண்டிருப்பது போலவேதான் இப்பொழுதும் போய்க்கொண்டிருக்கிறது. அவர்களுடைய நிர்வாகத்தைப்பற்றி குற்றங்களைக் கண்டுபிடித்து அவைகளின்மீது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதைப்பற்றி பெரும் அளவில் கண்டிப்பதற்கும் இல்லை பெருமைப்படுவதற்கும் இல்லை. வரக் கூடிய குற்றங்களை எப்பொழுதும்போல்தான் கண்டு பிடித்து நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள். ஆனல் அரசியல் விஷய

9th March 1961] [Sri M. Kalyanasundaram]

மாக அவர்கள் நடந்து கொள்வதுதான் கண்டிக்கக் கூடியதாக இருக்கிறது. அரசியல் கட்சிக் கூட்டங்கள் நடக்கும்போது அவர்களுடைய நடவடிக்கைதான் கண்டிக்கக்கூடியதாக இருக்கிறது. அதைப்பற்றி தான் பல புகார்கள் வந்துகொண்டிருக்கின்றன. மற்ற விஷயங்களில் எந்த விதமான புகாரும் வருவதாக இல்லை என்பதைப்பற்றி கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இளைஞர் காங்கிரஸில் இன்றைக்கு யார் சேர்ந்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். தொழிற் சங்கம் கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் இதர கட்சிகளிலிருந்து, நடவடிக்கை எடுத்துக்கொண்டு விலக்கப்பட்ட பேர்கள்தான் இளைஞர் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து கொண்டு இப்படிப்பட்ட தொந்தரவுகளையெல்லாம் கொடுக்கிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சியில் ஒழுங்கீனமாக நடந்துகொண்டு நடவடிக்கை எடுக்கப்பட்டு விலகியவர்கள்தான் இன்றைக்கு இளைஞர் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்திருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் எல்லோரும் சுயநல வாதிகளாக உள்ளவர்கள். அவர்களுக்கு எந்த விதமான பொறுப்பும் கிடையாது. அப்படிப்பட்டவர்கள் தான் போலீஸ்காரர்களை பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள். இவர்கள்தான் போலீஸ் ஸ்டேஷனில் உட்கார்ந்துகொண்டு புகார்களைச் செய்கிறார்கள். எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் யாராவது தன்னை அடித்துவிட்டார்கள் என்று புகார் செய்ய போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தால் இளைஞர் காங்கிரஸைச் சேர்ந்தவர்கள் அங்கிருந்துகொண்டு புகார் செய்ய வந்தவர் மீதே புகார் எழுதி கொடுக்கும் அளவில் வேலை செய்து வருகிறார்கள். யாரைப்பற்றி புகார் செய்ய வருகிறார்களோ அவரிடமிருந்து அடிப்பட்டவர் குற்றம் செய்ததாக புகார் மனு எழுதி வாங்கப்படுகிறது. அதற்குத் தகுந்தாற்போல் எழுதி வாங்கி விடுகிறார்கள். அந்த முறையில் தான் இன்றையதினம் போலீஸ்காரர்கள் வேலை செய்கிறார்கள். இதற்குக் காரணம் போலீஸ்காரர்கள் இல்லை. அவர்களுடைய நிலைமை அந்த நிலைமையில் இருக்கிறது. இதற்கு உதாரணமாக கீழப்பசலை சம்பவம் இருக்கிறது. அதைப்பற்றி கேட்கும்போது அங்கு கம்யூனிஸ்டுகள்தான் இருக்கிறார்கள் அவர்களுக்குள் சண்டை வந்ததால் அந்த சம்பவம் நடைபெற்றது என்று சொல்லுகிறார்கள். அங்கு விவசாய சம்பந்தமாக தகராறுகள் ஏற்பட்டது. அங்கு காங்கிரஸ் கம்யூனிஸ்ட் தகராறு கிடையாது. நிலம் சம்பந்தமாக ஒருவருக்கு ஒருவர் தகராறு. அதனால் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தால் சௌகர்யம் ஏற்படும் என்பதற்காக இப்படி கட்சியை உபயோகப்படுத்துகிறார்கள். அங்குள்ள சப்-இன்ஸ்பெக்டர் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அந்த சப்-இன்ஸ்பெக்டர் எப்படியாகப்பட்டவர் என்பதற்கு அவருடைய முந்திய காலத்தைப் பற்றிய வரலாற்றை கொஞ்சம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். அவர் சில ரௌடிகளை அழைத்து வைத்துக்கொண்டு அங்குள்ள பெண்களை அடித்திருக்கிறார், தாலிகளை அறுத்திருக்கிறார். அவர்களிடமுள்ள நெல்லைக் கொள்ளை அடித்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் கொள்ளை அடிக்கவில்லை ஒரு பகுதியை பறிமுதல் செய்து விற்றுவிட்டு மற்றொரு பகுதியை வைத்திருக்கிறார்கள். அதற்குக் காரணம் வைத்திருக்கக்கூடிய பகுதியை கொள்ளை

[Sri M. Kalyanasundaram] [9th March 1961

யடித்தார்கள் என்று காட்டுவதற்காக வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதை வைத்துக்கொண்டு கேஸ் போடுவதற்கு. ஒரு சப் இன்ஸ்பெக்டர் எதை வேண்டுமானாலும் செய்ய முடியும். ஒரு ஹெட் கான்ஸ்டபில் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். ஒரு ஐ.ஜி.-யை மாற்றவேண்டும் என்று ஒரு சப்-இன்ஸ்பெக்டர் நினைத்தால் அவரைக்கூட மாற்ற முடியும். அந்த அளவுக்கு ஒரு சப்-இன்ஸ்பெக்டருக்கு அதிகாரம் இருக்கிறது. எதிர்க் கட்சி ஏதாவது சொன்னால் திரித்துக் கூறுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். ஆனால் அதைப்பற்றி முடிவு சொல்வதற்கு பொதுமக்கள் இருக்கிறார்கள். அவர்கள் பார்த்துக்கொள்ளுவார்கள். பொது மக்களை அடக்கிவிட முடியாது. தேர்தல் காலத்தில் இப்படியெல்லாம் பயன்படுத்திக்கொள்ளப்படுகிறது. இதற்குத் தக்கபடி போலீஸ் அதிகாரிகளுக்குத் தக்கபடி சில சட்டங்கள் இருக்கின்றன, அவைகளை அவர்கள் பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள். அவர்களுக்கு ஏற்றவாறு சில சட்டங்கள் இருக்கின்றன. 107-வது செக்ஷன், 151-வது செக்ஷன், 75-வது செக்ஷன். அவைகளை வைத்துக்கொண்டு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் எதை வேண்டுமானாலும் செய்யலாம். விசாரணை இல்லாமலேயே வழக்குகளை தொடருவதற்கு இப்படிப்பட்ட செக்ஷன்கள் உபயோகமாக இருக்கிறது. எதிர்க் கட்சிகளுக்கு தொந்தரவு கொடுப்பதற்கு இந்த செக்ஷன்கள் ரொம்பவும் பயன்படுகிறது. ஆகவே, இப்படிப்பட்ட சட்டங்களை திருத்தி அமைக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவைகளை எந்த அளவுக்கு திருத்தி அமைத்துக்கொள்ள வேண்டுமோ அந்த அளவுக்கு திருத்தி அமைத்துக் கொள்ளவேண்டும். போலீஸ் அதிகாரிகள் பாரபட்சமற்ற முறையில் நடந்துகொள்வதற்குத் தக்கபடி அவைகளை திருத்திக்கொள்ளவேண்டும். போலீஸ் இலாகாவின் நிர்வாக ரிப்போர்ட்டை கவனிக்கவேண்டும். அது எந்த அளவில் எழுதி இருக்கிறார்கள் என்பதையும் பார்க்கவேண்டும். அது அரசியல் அடிப்படையில்தான் தயாரிக்கப்பட்டிருக்கிறது என்பது நன்றாகத் தெரிய வரும். இவ்வளவு கேவலமாக அதைத் தயாரிக்க வேண்டுமா என்று கேட்கிறேன். ஒரு நிர்வாகத்தைப்பற்றி எழுதும்போது இப்படியெல்லாம் எழுத வேண்டுமா? அவற்றில் எதிர்க் கட்சிகளைப்பற்றி குறிப்பிட வேண்டிய அவசியம் என்ன? எதிர்க் கட்சிகளைப்பற்றி எவ்வளவோ கேவலமாக எழுதி இருக்கிறார்கள். இதையெல்லாம் வாசிக்கும்போது, துரதிருஷ்டவசமாக, குறைகளாக இருக்கக் கூடியவைகள்தான் என்னுடைய கண்ணில் படுகிறது.

"The Communists exploited the death of Arumugham concerned in a case of theft in the Kodambakkam Police station and at meetings held resolutions were passed appealing to the Government to hold a public enquiry into his death".

என்று எழுதப்பட்டிருக்கிறது. எக்ஸ்ப்ளாயிடட் தி சிட்டுவேஷன் என்று எழுதியிருக்கிறார்கள். இந்த வழக்கைப்பற்றி எல்லோருக்கும் தெரியும். கம்யூனிஸ்ட் கட்சி இதை எப்படி எக்ஸ்ப்ளாயிட் பண்ணியது என்பது தெரியவில்லை. கம்யூனிஸ்ட் கட்சி இருந்த

9th March 1961] [Sri M. Kalyanasundaram]

தால்தான் இப்படிப்பட்ட கேஸ்கள் எல்லாம் வெளி வந்தது. அதிகாரிகள் பொறுப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளாமல் இருந்ததை கம்யூனிஸ்ட் கட்சிதான் வெளியாக்கியது. அதற்கு அவர்களை பாராட்ட வேண்டியிருக்க அவர்கள் எக்ஸ்ப்ளாயிட் பண்ணினார்கள் என்று சொல்வது சரியல்ல. இவ்வளவு கேவலமாகவா எழுத வேண்டும்? போலீஸ் எந்த அளவுக்கு ஒழுங்கீனமாக நடந்து கொண்டிருக்கிறது என்பதை பொது மக்கள் அறிந்து கொள்வதற்குத்தான் கம்யூனிஸ்ட் கட்சி நடவடிக்கை எடுத்துக்கொண்டது. பொது மக்கள் நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். அதற்கு இப்படியெல்லாம் எழுதுவது நன்றாக இல்லை. இப்படி ஒவ்வொரு கட்சியைப்பற்றியும் எழுதி இருக்கிறார்கள். அதில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு அதிகமாக இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக என்ன எழுதி இருக்கிறது என்றால்,

'In May 1958 the Communists were elated over the success of their party candidates in the Devikulam and Peermedu by-election'

என்று எழுதப்பட்டிருக்கிறது. கம்யூனிஸ்ட் கட்சி சட்டப்படி இயங்கக்கூடிய கட்சி. அப்படி இருக்கும்போது அவர்களைப்பற்றி இப்படியெல்லாம் எழுதலாமா? அதைப்போலவே திராவிட முன்னேற்றக் கட்சியைப்பற்றியும் எழுதி இருக்கிறார்கள். அவர்களைப் பற்றியும், சில சம்பவங்களைப்பற்றி எழுதி இருக்கிறார்கள். தமிழ் அரசு கழகத்தைப்பற்றியும் எழுதி இருக்கிறார்கள். திராவிடக் கழகத்தைப்பற்றியும் எழுதி இருக்கிறார்கள். அந்தக் கட்சி ஆளும் கட்சிக்கு ஆதரவாளர்களாக இருந்தாலும்கூட அவர்களைப்பற்றியும் எழுதி இருக்கிறார்கள். ஏனென்றால் அந்த அளவில் அவர்கள் நடந்துகொண்டிருக்கிறார்கள். பிரஜா சோஷலிஸ்ட் கட்சியைபற்றி எழுதி இருக்கிறார்கள். ஆனால் இந்த இடத்திலாவது காங்கிரஸ் கட்சியைப்பற்றியோ அல்லது இளைஞர் காங்கிரஸ் கட்சியைப் பற்றியோ எழுதவே இல்லை. அவர்கள் என்ன ஒன்றும் செய்யவில்லையா, எந்த விதமான சம்பவங்களையும் அவர்கள் செய்யவில்லையா? அவர்களைப்பற்றி ஏன் ஒரு இடத்தில்கூட எழுதவில்லை. ஆகவே, இப்படி அரசியல் விஷயமாக ரிபோர்ட்டில் எழுதலாமா எதிர்க் கட்சிகளை கேவலமான முறையில் என்று கேட்கிறேன்.

அடுத்தபடியாக, போலீஸ் ஸ்டேஷன்களை வருடா வருடம் இன்ஸ்பெக்ஷன் செய்கிறார்கள். ஸ்பெஷல் ஆபிசர் டூர் போகிறார் அதற்காக அவர்கள் எந்த மாதிரி இன்ஸ்பெக்ஷன் பண்ணுகிறார்கள் என்பதையும் பார்க்கவேண்டும். அதைப்பற்றி என்ன எழுதி இருக்கிறார்கள் என்றால் **'I toured the districts ..... during the year'** இன்ஸ்பெக்ஷனுக்கு என்று சீனியர் ஆபீசரை அனுப்ப வேண்டாம் என்று நாங்கள் சொல்லவில்லை. ஒவ்வொரு ஜில்லாவிற்கும் போவானேன். ஒரு வருஷத்தில் ஒரு ஜில்லாவை எடுத்துக்கொண்டு அதை முடித்து விடுவதுதானே. ஒரு ஸ்டேஷனுக்குச் சென்று எல்லாவற்றையும் இன்ஸ்பெக்ஷன் செய்து விடுகிறதுதானே. அந்த வருஷத்தில் எவ்வளவு கேஸ்கள் வந்தன, எவ்வளவு புகார்கள் வந்தன முதலியவற்றை படிப் படியாகச் செய்ய வேண்டும். சீனியர் ஆபீசர் டூர் பண்ணும் போது அவர் சர்ப்ரைஸ் செக் பண்ண வேண்டும். ஐ.ஜி. பர்சன

லாக எவ்வளவோ இடங்களுக்குச் செல்லுகிறார். அதை நான் வரவேற்கிறேன். சில இடங்களுக்கு அவர் நேரடியாகச் சென்று கேஸ்களை விசாரிக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். கேஸ் டைரிகள் எழுதப்படுகின்றன. அந்தக் கேஸ் டைரி எழுதுவது போல் கேஸ் போடப்படுகின்றனவா என்பதைப் பார்க்க வேண்டும். அதைப்பற்றி கனம் மெம்பருக்கு நன்றாகத் தெரியும். அவர் ஒரு க்ரிமினல் லாயராக இருப்பதால் கேஸ் டைரிகள் எந்த விதத்தில் எழுதப்படுகின்றன என்று அவருக்கு நன்றாகத் தெரியும். அப்போது கேஸ் எப்படி நடத்துவது? நான் வக்கில் இல்லை. அநுபவத்தில் விஷயத்தைத் தெரிந்துகொண்டேன். இதில் கட்சி வித்தியாசம் இல்லை. இன்றைக்கு எங்களுக்கு என்றால் நாளைக்கு உங்களுக்கு. போலீசுக்குச் சாட்சி சொல்வதற்குக்கூடப் பயப்படுகிறார்கள் என்றால் காரணம் என்ன? ஆனால் நான் ஏதோ தனிப்பட்ட அதிகாரிகளைப்பற்றிக் குறை சொல்வதாக நினைக்கக்கூடாது. சில நல்ல காரியங்களையும்கூட அவர்கள் செய்கிறார்கள். திருச்சியில் ஒரு கலவரம் என்றால் ஐ.ஜி. அங்கே பறந்து சென்றார். மேய்ச்சூரில் கொலை நடந்தது என்றால் ஐ.ஜி. உடனே அந்த இடத்திற்குச் சென்றார். நடந்து சென்று விசாரித்ததில் என்ன பயன் ஏற்பட்டது? இன்னும் ஒருவரைக்கூட பிடிக்க முடியவே இல்லை. ஒருவரைச் சுட்டுக் கொன்றதாகப் பேப்பரில் இரண்டு நாள் முன்பு படித்தேன். சுட்டுக் கொல்லப்பட்டும், 11 பேர்களை சுட்டுத் கொன்ற சமுதாய விரோதி சுட்டுக் கொல்லப்படத்தான் வேண்டும். போலீசாரோடு நடந்த துப்பாக்கிச் சண்டையில் அவனைச் சுட்டுக் கொன்றிருந்தாலும்கூட, காவலில் கட்டி வைத்தே சுட்டிருந்தாலும் சரி—இப்பேர்ப்பட்ட சமுதாய விரோதிகள் சுட்டுக் கொல்லப்படுவது மற்றவர்களுக்கும் ஒரு படிப்பினையாக இருக்கும்.

ஆனால் இன்னும் பங்களாக்களில் எத்தனை சமுதாய விரோதிகள் இருக்கிறார்கள்? கூடிக்கூடி அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது போலீசாருக்குத் தெரியாதா? ஆனாலும் அவர்கள் பேரில் ஏன் வழக்குத் தொடரப்படவில்லை.

எதிர்க் கட்சிகளை மட்டும் ஒடுக்குவதற்காக 107 செக்ஷன், 151 செக்ஷன் எல்லாம் எடுக்கப்படுகிறது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக பல சம்பவங்கள் எடுத்துக் காட்டப்பட்டன. போலீஸ் அதிகாரிகளுக்குள் அரசியல் இருக்கிறது. அதனாலேயே தான் சொல்வேன். சமுதாயத்தில் பெரிய அந்தஸ்தில் உள்ளவர்களோடு கூட அவர்கள் நெருங்கிப் பழகக்கூடாது. என்னுடைய சகோதரன் போலீஸ் அதிகாரியாக இருந்தால் என் வீட்டிற்கு வர வேண்டாம் என்றே சொல்வேன். எனக்குச் சகோதரன் இல்லை என்று இல்லை. ஆனால் நான் இன்னும் என் சகோதரன் வீட்டில் தங்குவது இல்லை. என் செல்வாக்கு அவனுக்குப் பயன்படக் கூடாது என்று. போலீஸ் அதிகாரிகளிலேயே இரண்டு பேர்கள் ஒரு ஜில்லாவைச் சேர்ந்தவர்கள் இரண்டு சாதி. ஒருவர் உறவினரைப் பார்வையிடப்போகிற போர்வையில் அந்த ஊர்க்காரர்களிடம் சென்று "காமராஜ் இருந்தால்தான் நல்லது. நீங்கள் எல்லாம் எதற்காக எதிர்க் கட்சியில் போய்ச் சேருகிறீர்கள்" என்று சொல்வது. இன்னொருவர் "எனக்கு இந்த மந்திரி கைக்

9th March 1961] [Sri M. Kalyanasundaram]

குள்ளே, ஐ.ஜி. பார்த்தால்கூட என்னை ஒன்றும் செய்ய முடியாது" என்று சொல்வது. இப்படி அதிகாரிகளுக்குள்ளேயே இந்த மந்திரியைச் சேர்ந்தவர், அந்த மந்திரியைச் சேர்ந்தவர் என்ற வித்தியாசம், வேற்றுமை, செல்வாக்கு இருந்தால் நிர்வாகம் எப்படி நடைபெறும்? அந்த ஆட்கள் யார் என்று மந்திரி தனியாகக் கேட்டாலும் சொல்லத் தயாராக இருக்கிறேன். அல்லது இதைப் பற்றி விசாரிப்பதாக இருந்தாலும் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன்.

இம்மாதிரியான பல ஒழுங்கீனங்கள் நடைபெற்றுக்கொண்டிருப்பதற்குக் காரணம் என்ன? லா அண்டு ஆர்டர் என்றால் என்ன? ப்யூராக்ரட்டிக் கவர்ன்மெண்ட் இருந்தபோது இருந்ததா? அல்லது இப்போது இருக்கக்கூடிய சமதர்ம க்ஷேமநல சர்க்காரின் கொள்கை அடிப்படையில் அமைய வேண்டியதா? இதைப்பற்றி திருஷ்டி, பயிற்சி அவர்களுக்கு இல்லை. என்னையே ஒருவர் கேட்கிறார், இந்தச் சட்டம் இந்த ஜில்லாவுக்குப் பொருந்துமா என்று. சட்டசபையில் நடக்கக்கூடிய விஷயம் என்ன என்பதைக்கூடத் தெரிந்துகொள்ளாமல் தூங்குகிறவன் அல்ல நான். அப்படி இருக்க நாம் ஒரு சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறோம், அந்தச் சட்டப்படி அவ்வதிகாரி நடக்க வேண்டியதிருக்க என்னிடமே பொறுப்பற்ற முறையில் அடக்க ஒடுக்கமின்றி, "இந்தச் சட்டம் இந்த ஜில்லாவிற்கு உண்டா?" என்று கேட்கிற ஒரு போலீஸ் அதிகாரி இருக்கிறார் என்றால்—எனக்கு அதிகாரம் இருந்திருந்தால் உடனே அவரை டிஸ்மிஸ் செய்திருப்பேன்.

(Mr. Speaker in the Chair.)

இன்னொரு விஷயம். போலீஸ் கான்ஸ்டபிள்களுக்கு வீடு கொடுக்கிறோமோ இல்லையோ, போலீஸ் அதிகாரிகளுக்கு கட்டாயமாக சர்க்கார் வீட்டு வசதி தங்கள் பொறுப்பிலேயே செய்து கொடுக்க வேண்டும். அவர்கள் நிலப் பிரபுக்களுடைய வீடுகளிலோ, பஸ் முதலாளிகளுடைய வீடுகளிலோ தங்குவது என்று வருகிற இடங்களில்தான்—அவர்கள் தங்களுடைய சுயநலத்திற்கு இவர்களைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். இன்றைக்கு லஞ்சம், ஊழல், ஒழுங்கீனம் இவைகள் இருக்கின்றன என்றால் இதற்கு முழுப்பொறுப்பு அதிகாரிகளுடையது அல்ல. சமுதாயத்தில் இருக்கக்கூடிய முதலாளிகள், நிலப்பிரபுக்கள், அந்தஸ்தில் உள்ளவர்கள் தங்கள் சுயநலத்திற்கு பல வகையில் செயல்படுகிறபோது இந்த அதிகாரிகள் அவர்களுடைய சுயநலத்திற்கு இரையாகிக் கொண்டிருக்கிறார்கள். இந்த அடிப்படையை மாற்றாமல் சோஷலிச சமுதாயத்தை அமைப்பது என்பது உருப்படியான யோசனையாக அமையாது.

ஆகவே, நான் சொல்லிக்கொள்வது உடனடியாக ஒரு கமிட்டியைப் போட்டு ஸ்டாண்டிங் ஆர்டர்களை எப்படி இன்றைய சூழ்நிலைக்கு ஏற்றவாறு திருத்தி அமைப்பது, பழைய விதிகளில் என்ன என்னவற்றை உடனடியாகத் திருத்தி அமைத்தாகவேண்டும் என்பது பரிசீலிக்கப்படவேண்டும். அதுபோலவே அரசியல்

[Sri M. Kalyanasundaram] [9th March 1961

கட்சிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து—மாற்றுக் கட்சிகளைப்பற்றி காங்கிரஸ் கட்சி குறை சொல்வதாக இருந்தாலும்கூட எல்லா வற்றையும் உட்கார்ந்து விசாரித்து—குற்றம் எங்கள் பேரில் இருந் தாலும் அதையும் ரெக்கார்டு பண்ணிக் கொடுங்கள்—ஆகவே சர்வ கட்சிக் கூட்டம் நடத்தி குற்றம் யார் பேரில் இருக்கிறது என் பதைத் தீர விசாரிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, மிகப் பொருத்தமாகவே அங்கிகரிக்கப்பட வேண்டிய கோரிக்கைகளில், இந்த ஆண்டு, போலீஸ் கோரிக்கை முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது. அதுவும் 6 கோடி சில்லரை ரூபாய் கோரப்பட்டிருக்கிறது. ஏறக்குறைய பட்ஜெட்டில் 15-ல் ஒரு பங்கு போலீசுக்கு வேண்டியிருக்கிறது. இன்றையதினம் நாம் வெளிநாடுகளில் இருந்தும், உள்நாட்டில் இருந்தும் ஏராளமான கோடி ரூபாய்களை கடனாகவும் வசூலித்து நம்முடைய நாட்டு அபிவிருத்தித் திட்டங்களுக்காகச் செலவிட்டுக்கொண்டிருக் கிறோம். விவசாயத் துறை, தொழில் துறை, கல்வித் துறை என்று இப்படி ஒவ்வொரு துறையிலும் பல அபிவிருத்தித் திட்டங்களை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறோம். இப்படியிருக்கையில் 6.23 கோடி ரூபாய் போலீசுக்காகச் செலவு செய்ய வேண்டுமா என்றால் இதன் அவசியத்தை கனம் அங்கத்தினர்கள் உணர்வார்கள் என்று நினைக்கிறேன். மக்கள் எல்லாம் அமைதியாக வாழ்வதற்கு போலீஸ் மிக அவசியம். நல்ல அபிவிருத்தி அடைந்துள்ள நாடு களில்கூட—எந்த அளவுக்கு ஒரு நாடு செழிக்கிறதோ அந்தந்த அளவுக்கு போலீஸ் தேவையும் உயர்ந்துகொண்டே போகிறது. ஆகவேதான், சட்டமன்றத்தில் உள்ள அங்கத்தினர்கள்மட்டும் அல்ல, வெளியில் இருக்கக்கூடிய பொதுமக்கள் எல்லோரும் போலீசிடத்தில் அக்கறைகொண்டவர்களாக இருக்கிறார்கள். என் றைக்குமே சமூக விரோதிகளுக்குப் போலீசைக் கண்டால் பிடிப்பது இல்லை. ஆனால் போலீஸ் சமூக விரோதிகளிடத்திலும் அனுதாபத்துடனேயே நடந்துகொள்கிறார்கள். அவர்களையும் கூடப் புறக்கணிப்பதில்லை. போலீசார் கொஞ்சம்கூட பட்சபாத மின்றி, வித்யாசமின்றித்தான் மக்கள் அனைவருக்கும் தொண் டாற்றி வருகிறார்கள். திரு. கல்யாணசுந்தரம்கூடக் குறிப்பிட் டார், மேய்ச்சேரியில் ஒருவர் போலீசாரோடு துப்பாக்கிச் சண்டை செய்தான் என்று. சண்டையின் போதுதான் அவர் சுட்டுக் கொல்லப்பட்டார். அதுவும் வேறு வழியின்றி அவர் சுடப்பட்டதாகத் தெரிகிறது. போலீஸ் விஷயம் என்றால் எதிர்க் கட்சிகள் அதிக அக்கரை, விசேஷ அக்கரை எடுத்துக்கொள் கிறது. ஆனால் ஒன்று. அரசாங்கம் பிடிக்கவில்லை என்றால் உடனே போலீஸ் பிடிக்கவில்லை. எவ்வளவுதூரம் அவர்களை குறைவாகப் பேச வேண்டுமோ அவ்வளவு பேசுவது—இதில் எனக்கு ஆச்சரியம் இல்லை. இந்த விவாதத்தில் கலந்துகொண்ட கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரைவிட, திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவரைவிட, எதிர்க்கட்சி என்ற முறையில் பிரஜா சோஷிய லிஸ்ட் கட்சித் தலைவராக இருக்கும் ஸ்ரீ சின்னதுரை அவர்கள்

9th March 1961] [Sri M. Bhaktavatsalam]

சாதாரணமாகத் தம் பிரஜா சோஷியலிஸ்ட் கட்சியைப் பெருமைப்படுத்தி, காங்கிரஸ் கட்சியைக் கடுமையாகத் தாக்கி பேசினாலும்கூட அவர்கள், எல்லோரும் ஆச்சரியப்படும்படியாக நேற்று போலீசைப்பற்றி மிகவும் பாராட்டி புகழ்ந்து பேசினார். எதிர்க்கட்சி என்ற தோரணையில்லாமல் போலீசை அவர் பாராட்டிப் பேசினார். அவர்கள் ஆளும் கட்சியினரை பலதடவை தாக்கி பேசுவதுண்டு. ஆனால் இந்த போலீஸ் மான்யத்தைப் பொறுத்தவரை அவர்கள் இதைப்பற்றி புகழ்ந்து பேசியதற்கு அவர்களை நான் பாராட்டுகிறேன்.

எதிர்க்கட்சித் தலைவர்கள் எல்லாம் தாக்கி பேசுவதற்கு அடிப் படையான காரணம் என்னவென்றால்: அரசாங்கத்தை தாக்க வேண்டும், அதனால் மக்களிடையே குழப்பம் உண்டாக வேண்டும் என்பதே அவர்களுடைய எண்ணம். இப்படிச் செய்தால் போலீசை செயலற்றதாக்கிவிடலாம், அரசாங்கம் சரிவர நடக் காது என்பது அவர்களுடைய எண்ணமாகும். போலீஸ் இலாக் காவில் இருப்பவர்கள் அவர்களுக்கு வேண்டியவர்களாக இருந்த போதிலும், அவர்களைத் தாக்கிப் பேசுவதன்மூலம் அரசாங்கத் திற்கு ஒரு கெட்டபெயர் உண்டுபண்ணி ஒரு குழப்ப நிலையை ஏற்படுத்த வேண்டும் என்பதே அவருடைய முக்கியமான நோக்கம். மற்றக் காரணங்களையெல்லாம் நான் சொல்ல முற்படவில்லை. இந்த வகையில் அரசாங்கத்தைத் தூற்று வதற்குப் போலீசைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். இவ் வாறு செய்து மக்களிடையே குழப்ப நிலையையும், பல வீனத்தையும் உண்டாக்க வேண்டும் என்பதுதான் அவர் களுடைய அடிப்படையான நோக்கம். ஆளுகின்ற கட்சி தங்களுடைய கட்சிக்கு போலீசை பயன்படுத்திக்கொள்கிறார்கள் என்று சொன்னார்கள். ஆளுகின்ற கட்சிக்கு போலீசினுடைய தயவு ஒன்றும் வேண்டாம். பல ஆண்டுகாலமாக நாங்கள் பிரிட்டிஷ் ஆட்சி காலத்திலிருந்து கடுமையான போராட்டத்தில் ஈடுபட்டு நடத்தினோம். அப்பொழுது ஒரு முறை பிரஜா சோஷிய லிஸ்ட் கட்சியைத்தவிர மற்ற எதிர்க்கட்சியினர் எல்லோரும் அப் பொழுது ஆளுகின்ற கட்சியுடன் சேர்ந்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஆளும் கட்சியோடு காங்கிரஸ் கட்சியினர் நடத்திய இறுதி போராட்டத்தை கம்யூனிஸ்ட் கட்சியினர் எதிர்த்தார்கள். நாங்கள் அந்த காலத்திலேயே போலீஸ் தயவை நாடாதவர்கள். இப்பொழுது மட்டும் அவர்களின் உதவியை ஏன் நாடவேண்டும். அப்படி அவர்களுடைய தயவை நாடாமல் சுதந்திர போராட் டத்தை நாங்கள் வெற்றிகரமாக நடத்தினோம். (ஆரவாரம்) சென்னை நகரத்திலே அப்பொழுது காங்கிரஸ் மகாசபை நடத்தி னோமே அப்போது போலீஸ் உதவியைக்கொண்டுதான் நடத்தி னோமா? எத்தனையோ இயக்கங்கள் போராட்டங்கள் அப்போ தெல்லாம் போலீஸ் உதவியைக் கொண்டுதான் நடத்தினோமா? நான் அப்பொழுது போலீசிடம் அடிபட்டிருக்கிறேன். அதாவது சென்னை நகரத்தில் ஜனவரி 26-ம் தேதி சுதந்திர தினத் தன்று நானும் சில பேர்களும் கொடி ஏந்திக்கொண்டு போனோம்.

[Sri M. Bhaktavatsalam] [9th March 1961

இப்போது சிலர் ஊர்வலம் நடத்துவதுபோல் நாங்கள் நடத்த வில்லை. போலீசார் விரைக அடித்தார்கள். அது அவசியம் இல்லாதது.

இப்போது இராமநாதபுரத்தில் நடந்த ஒரு கேசைப்பற்றி சொன்னார்கள். ஒருவரை போலீசார் அடித்ததாகச் சொன்னார்கள். ஒரு முனிசிபல் கமிஷனர் புகார் செய்ததின்பேரில் போலீசார் அரஸ்ட் செய்ததை அந்த நபர் ரெசிஸ்ட் செய்தார் (குறுக்கீடு) அரஸ்ட் செய்யும்போது ரெசிஸ்ட் செய்தால் இழுத்துக்கொண்டு தான் போகவேண்டும்.

நான் முன்பு சொன்னதுபோல் என்னையும் போலிஸ்காரர்கள் அடித்தார்கள். நான் படிக்கும்போது என்னுடைய ஆசிரியர் என்னை கடிந்து பேசியதுகூட இல்லை. இருந்தாலும் போலிசாரிடம் அடிபடவேண்டிய நிலைமை ஏற்பட்டது. அப்போது எல்லாக் கட்சியினரும் ஒன்று சேர்ந்து காங்கிரசை எதிர்க்கவில்லையா? அப்படி காங்கிரசை எதிர்த்தும் காங்கிரஸ் தேர்தலில் வெற்றி பெற வில்லையா?

SRI K. ANBAZHAGAN : வெள்ளையர் ஆட்சி காலத்தில் போலீசார் காங்கிரஸ்காரர்களை நடத்தியபடி, இப்பொழுது ஆட்சி யாளர் மற்ற எதிர்க்கட்சியினரை நடத்த வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் விரும்புகிறார்களா என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்பொழுது யாரும் பலாத்காரத்தில் ஈடுபடவில்லை. பலாத்காரம் செய்தால்கூட இப் பொழுது போலிஸ்காரர்கள் அவ்விதமாக நடந்துக்கொள்வதில்லை. மிக வெற்றிகரமாக தங்கள் கடமையை செய்து வருகிறார்கள் என் பதற்காக அவர்களை நான் மிகவும் பாராட்டுகிறேன்.

அப்போது அத்தகைய உறவுதான் போலிஸ்காரர்களுக்கும் எங்களுக்கும் இருந்தது. அப்போது எல்லா எதிர்க்கட்சியினர் களும் ஒன்று சேர்ந்து போட்டியிட்ட போதிலும் காங்கிரஸ் வெற்றி பெறவில்லையா? சென்னை நகரத்திலே காங்கிரஸ் மகாசபை நடத்தப்படவில்லையா? அப்படியிருக்கும்போது மண்ணைத் தூர்த்துத்தான் செய்வது என்பது சரியான காரியம் அல்ல. இம் மாதிரி போலீஸ் இலாகாவினர்களின் மீதும் அபாண்டமாக குறை கூறுவது சரி அல்ல.

ஸ்ரீ அன்பழகன் அவர்கள் கும்பகோணத்தில் போலீசாரால் ஒருவர் அடிக்கப்பட்டு இறந்துவிட்டார் என்று சொன்னார்கள். உண்மையில் அவர் இறந்தது போலீசார்களால் அல்ல. அவர் மூட்டைபூச்சி மருந்தை சாப்பிட்டு அதனால்தான் இறந்தார். அவர்கள் இதைப்பற்றி கேட்டபோது நான் இந்த விஷயத்தை விசாரித்து அவர்களை என்கொயர் செய்வதாக சொன்னேன். அதையும் கேட்காமல் இந்தச் சட்டசபையில் பிரச்னை எழுப்பி அன்றைக்கு அந்தக் கட்சியினர் எல்லோரும் சேர்ந்து துக்கத்தை வெளிப்படுத்தும் கருப்பு பாட்ஜை அணிந்துவந்தார்கள். அதற்குப்

பிறகு எதிர்க்கட்சியினர் ஒன்றாகச் சேர்ந்து சபையைவிட்டு வெளி யேறினார்கள். நான் விசாரிப்பதாகச் சொல்லியும் இவ்வாறு செய் தார்கள். இதை விசாரிக்க ஒரு ரெவின்யூ டிவிஷனல் ஆபீசரை ஏற்படுத்தினோம். அவர் முறையாக விசாரித்ததின்பேரில் அந்த நபர் மூட்டைப்பூச்சி மருந்து சாப்பிட்டதினால் இறந்தார், போலீ சாரினால் அல்ல என்ற முடிவு தெரிவிக்கப்பட்டது.

SRI K. ANBAZHAGAN : இந்த வழக்கைப்பற்றி சொல்லும் போது கனம் அமைச்சரை ஒன்று கேட்க விரும்புகிறேன். அடித்த வர்கள்மீது அப்போதாவது வழக்கு போட்டார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் சொல்லுவது ஒரு விஷயம். கனம் அங்கத்தினர் கேட்பது வேறு விஷயம். இதைக் கேள்வி நேரம் மாதிரி நினைத்துக்கொண்டு உபகேள்வி போடுகிறார்கள் போலும். அவ்வாறு அடிபட்டு இறந்தவரே அவர் இறப்பதற்கு முன் கொடுத்த வாக்குமூலத்தில் தான் மூட்டைப் பூச்சி மருந்து சாப்பிட்டதாக ஒத்துக்கொண்டார்.

பின்னர், தனிப்பட்ட ஹோதாவில் மாஜிஸ்திரேட்டு முன்பு புகாரும் கொடுக்கப்பட்டது. அன்பழகன் அவர்கள் ஒரு பெரிய ஜாபிதா கொடுத்தார்கள், அப்படி விசாரிக்கப்படாவிட்டால் கும்ப கோணத்தில் செய்ததுபோல் கொடுப்பதுதானே. கும்ப கோணத்தில் கேஸ் போட்டதோடு சப்-இன்ஸ்பெக்டரை மாற்ற வேண்டுமென்று சொன்னார்கள். டிஸ்ட்ரிக்ட் மாஜிஸ்ட்ரேட், அவரை மாற்றிவிடலாம் என்று சொன்னார், அவர் மாற்றப்பட்டு விட்டார். தங்குதடையின்றி விசாரணை நடந்தது. கடைசியில் ஜில்லா மாஜிஸ்ட்ரேட் விடுதலை செய்துவிட்டார் போலீஸ்மீது தப்புயில்லையென்று. முதலில் சொன்னதுதான் ஊர்ஜிதப்பட்டது. அதற்கு, இங்கு கருப்பு பாட்ஜ், வெளிநடப்பு இவைகள் எல்லாம் நடந்தன. யாரோ இறந்தார் என்றால் அதற்கு போலீஸ்தான் காரணமா? இறந்ததற்கு போலீஸா காரணம்? அவர் எப்படி வந்தார், எப்படி இறந்தார் என்று ஒன்றும் கவனியாது போலீஸ்தான் அடித்துக் கொன்றார்கள் என்று சொன்னார்கள். மற்றொரு சம்பவம்பற்றி சொல்லுகிறேன். நேற்று முன் தினம் 11 a.m. நான் ஒரு கிராமத்திற்குச் சென்றிருந்தேன், ஒரு கூட்டத்திற்கு. ஒரு வருடத்திற்குள் தமிழ் நாட்டோடு இணைக்கப்பட்ட கிராமம் அது. மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கிறது. அங்கு, ரோடு கள்கூட சரியாகயில்லை. இனிதான் போடவேண்டும். எலெக்ட்ரி ஸிட்டி வாவில்லை. வெளிச்சம் போடுவது என்று தி.மு.க அங்கத் தினர்கள் கேலியாகச் சொல்லலாம். வெளிச்சமேயில்லாது இருட் டாகயிருப்பதுதான் அவர்களுக்கு நல்லது. அங்கு இருட்டாகத் தான் இருக்கிறது. நம்மோடு இணைந்த பிறகு நமது போலீஸ் சார்ஜில் அது வந்தது. அங்கு பூராவும் திருட்டுச் சாராயம் காய்ச்சிக்கொண்டிருந்தார்கள். ரெயிட்பார்ட்டி எல்லாம் போய் மிகவும் கஷ்டப்பட்டார்கள், களைத்துக்கூடப் போய்விட்டார்கள். 2,000 காலன் வாஷ் எடுத்து கொட்டி இப்பொழுது கிராமம் சுத்தப் படுத்தப்பட்டுவிட்டது. ஆனால் இதன் விளைவாக இப்பொழுது பத்து பேர்கள் கழகத்தில் சேர்ந்துவிட்டார்கள். தி.மு.க. கொடி

[Sri M. Bhaktavatsalam] [9th March 1961

ஒன்றும் பறக்கிறது. கள்ளச் சாராயம் காய்ச்சுவதைத் தடுத்தால் அவர்களுக்கு ஆத்திரம் வருகிறது. நல்ல காரியம் செய்தால் ஆத்திரம்தான் வரும். கீழ்பசலை பற்றி முன் ஒரு கேள்விக்கு விடை அளித்தேன். நான் மானுமதுரைக்கு போயிருந்தபோது சிலபேர் வந்து என்னிடம் புகார் சொன்னார்கள். இங்கு அக்கிரமம் நடக்கிறது, எங்களுக்கு பாதுகாப்பே இல்லை என்று. ஒரு காலத்தில் ஊரே கம்யூனிஸ்டாகயிருந்தது. அங்கு ஒரு கிஸான் சங்கம் அமைத்து பணம் வசூல் செய்து வைத்திருந்தார்கள். அப்படியிருக்க, தகராறு வருவது இயற்கையே. பின்னர், சிலர் அதிலிருந்து பிரிந்து காங்கிரஸ் என்றார்கள். (குறுக்கீடு) நாங்கள் ஒன்றும் அவர்களுக்கு மாலை போடவில்லை. நாங்கள் அவர்களை சேர்த்துக் கட்டிக் கொள்ளவில்லை. காங்கிரஸ் என்று சொல்லி அந்தக் கட்சியை விட்டு பிரிந்து வந்ததற்காக அவர்களை உதைக்க ஏராளமாக கூட்டம் போய் அவர்களுக்கு தொந்தரவு கொடுக்க அவர்கள் ஒரு வீட்டினுள் போய் புகுந்துகொண்டார்கள். போலீஸ் அப்பொழுது சும்மாயிருக்க முடியுமா? என்னிடம் புகார் சொன்னார்கள். நான் கவனித்து, தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுங்கள் என்று சொன்னேன். அதிலிருந்து நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு விசாரணை செய்யப்படுகிறது. கனம் அங்கத்தினர் ஏழுமலை அவர்கள் இங்கு அழகாகப் பேசினார்கள். நான் சொல்வதை எதிர்கட்சி அங்கத்தினர்கள்கூட ஒப்புக்கொள்வார்கள். இன்று பேசியவர்களில் சிறந்த பேச்சு அவருடையதுதான் என்று சொல்வேன். அதனால் மற்றவர்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது. அவரது அனுபவம், கஷ்டம்பற்றி எடுத்துச் சொன்னார். எதிர்கட்சி அங்கத்தினர்கள் குறை கூறியதுபோல் நூறு மடங்கு காங்கிரஸ்காரர்களும் சொல்வார்கள். ஆனால் போலீஸை இழிவுபடுத்தி அவர்களை செயலற்றவர்களாக்க வேண்டுமென்ற அக்கறை காங்கிரஸ்காரர்களுக்கு இல்லை. ஆத்திரத்தோடு என்னிடம் வந்து சில காங்கிரஸ்காரர்கள் போலீஸ்மீது குறை கூறுவதுண்டு. எவ்வளவோ புகார்கள் வருகின்றன. எங்கள் கட்சியைச் சார்ந்தவர்கள்கூட மனம் குமுறிப் பேசுவார்கள். தி.மு.க. வினர் சொன்னாலும் சரி, கம்யூனிஸ்ட்கள் சொன்னாலும் சரி, எந்தக் கட்சிக்காரர்கள் சொன்னாலும் சரி, யார் புகார் கூறினாலும், அவற்றை பரிசீலனை செய்து வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. போலீஸார் செய்யும் வேலை, கம்பி மேல் நடப்பது போலாகும் என்று நான் முன்பு ஒரு முறை கூறியிருக்கிறேன். அவர்களை "காவலர்" என்று சொல்கிறார்கள். போலீஸ் செய்யும் வேலை காவல் வேலைமட்டுமா? நான் முன்பே கூறியிருக்கிறேன். அவர்கள் எவ்வளவோ வேலைகள் செய்கிறார்கள். அவர்கள் மக்களை பாதுகாக்கிறார்கள், மக்களுக்கு தொண்டு புரிகிறார்கள், மக்களுக்கு நல்ல வழி காட்டுகிறார்கள், கிராம மக்களுக்கு வேண்டிய உதவி புரிகிறார்கள். திட்டங்களை நிறைவேற்றுகிறார்கள், ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்கள், அவர்களே தங்கள் கையால் மண் எடுத்து, உழைத்து வேலை செய்கிறார்கள், கிராமங்களில் பள்ளிக்கூட பிள்ளைகளுக்கு

9th March 1961] [Sri M. Bhaktavatsalam]

ட்ரில் சொல்லிக் கொடுக்கிறார்கள். ஆக, போலீஸாரை **"Guide, Friend and Philosopher"** என்று சொல்வது பொருந்தும். அப்படிப்பட்டவர்களை, காவலர் என்று அழைப்பது முறையல்ல. காவல் வேலை மட்டுமல்ல அவர்கள் செய்வது. பப்ளிக் வொர்க்ஸ் என்றால் பொதுப் பணி என்று மட்டுமா அர்த்தம். மராமத்து இலாகா அமைச்சர் அவர்களே ஒப்புக்கொள்ளுவார்கள். அவ்வாறே போலீஸாருக்கு காவலர் என்று பெயரிடுவது சரியல்ல என்று முன்பே சொல்லியிருக்கிறேன். திருவொற்றியூரில் நடந்த தி.மு.க. கூட்டத்திற்குப் பிறகு, அதை அந்தக் கட்சியினர் காவலர் கூட்டம் என்று சொன்ன பிறகு அந்தப் பெயர் வேண்டாம் போலீஸுக்கு. ஐ.ஜி. இங்கு இருக்கிறார்கள். காவலர் என்ற பெயரை எடுத்துவிட்டு போலீஸ் என்றேயிருக்கட்டும் என்று அவருக்கு நான் இப்பொழுதே கூறுவேன். திருவொற்றியூரில் நடந்த கூட்டத்திற்கு காவலர் கூட்டம் என்று இவர்கள் சொன்ன பிற்பாடு அந்தப் பெயர் இனி போலீஸுக்கு ஒருக்காலும் கூடாது. அப்பெயர், புனிதமான பணியைச் செய்பவர்களுக்கு இழுக்கை ஏற்படுத்தும். இனி காவலர் என்ற பெயர் வேண்டாம், போலீஸ் என்றே இருக்கட்டும். ஆங்கிலம் ஒப்புயர்வற்ற மொழி, சிறந்த இலக்கியம், அதற்கு அகராதியும் உண்டு. அவர்கள் சில அன்னிய வார்த்தைகளை அப்படியே வைத்துக்கொள்ளுகிறார்கள்.

பின், தி.மு.க. அங்கத்தினர் அண்ணாமலை அவர்கள் நேற்று பேசினார்கள். அவர்கள், திருட்டுக் குற்றம் கண்டு பிடிப்பதுபற்றி சொன்னார்கள், 37 சதவிகிதம்தான் இருக்கிறது என்று. அவர்மீது எனக்கு மிகுந்த பாராட்டுதல் உண்டு. என்னுடைய அபிப்பிராயத்தை அவர் கட்சிக்காரர்களும் ஒப்புக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். இந்த மன்றத்திலுள்ள தி.மு.க. அங்கத்தினர்கள் எல்லோரையும்விட சட்டமன்ற விவகாரங்களில் அறிவு நிறைந்தவர் திரு. அண்ணாமலை அவர்கள்தான். அவர், நன்றாக அக்கரையோடு படித்துப் பேசுகிறார்கள், நிர்வாக அறிக்கை பற்றிக்கூட பேசினார்கள். நன்கு, கஷ்டப்பட்டு எல்லாம் படித்து நன்கு பேசுகிறார் அவர். கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் நல்ல அனுபவம் உள்ளவர், சிறந்த ஆற்றல் உள்ளவர். அவர் நிர்வாக அறிக்கையைப்பற்றி விமர்சனம் செய்ததைவிட விசேஷமாக செய்தார் திரு. அண்ணாமலை. அப்படி நல்ல படித்தவராகயிருந்தாலும், குற்றம் கண்டு பிடிப்பதுபற்றி இன்னும் கொஞ்சம் அவர் படிக்கவேண்டும். மற்ற நாடுகளில் இருப்பதைப் பார்க்க வேண்டும். நம் ராஜ்யம் காம்போஸிட் ஸ்டேட்டாகயிருந்த போது, திருடு கண்டு பிடித்தது, 1949-ல் 22.4, 1950-ல் 28.9, 1951-ல் 32.2, 1952-ல் 24.5, 1953-ல் 30.2 பின், 1958-ல் 37.4, 1959-ல் 33.03 என்றிருப்பதைக் கவனிக்க வேண்டும். லண்டன் போலீஸின் ஆற்றலை நாம் புகழ்கின்றோம். லண்டனில்கூட திருடு கண்டு பிடிப்பதில் தமிழ் நாடு அளவு இல்லை என்று சொல்லுகிறார்கள். அந்த அளவில் நமது போலீஸைப்பற்றி நாம் பெருமைப்பட வேண்டும். ஆண்டுக்கு ஆண்டு குற்றங்கள் குறைந்துகொண்டு வந்திருக்கின்றன. குற்றங்களை கண்டுபிடிப்பதில்கூட நம் ராஜ்ய போலீசார்

[Sri M. Bhaktavatsalam] [9th March 1961]

மிகவும் திறமையுடன் செயலாற்றி வருகிறார்கள். சென்னை 61.3 என்றிருக்கிறது. அதே சமயத்தில் பம்பாய் 21.96, உத்தர பிரதேசம் 8.6, மத்திய பிரதேசம் 19.9, பீகார் 3.5 என்றுதான் எண்ணிக்கை கணக்கு நமக்குத் தெரிவிக்கின்றது. இந்த முறை யிலும் நாம் முதன்மையாக நிற்கிறோம் என்பதை நாம் மற்ற நாடு களிலுள்ள கணக்குகளையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்து படித்து அறிந்துகொள்ளவேண்டும். குற்றம் கண்டுபிடிப்பதில் நாம் முதன் மையான நிலையில் இருக்கிறோம் என்பதைப்பற்றி கனம் விநாயகம் அவர்கள் குறிப்பிட்டார்கள். இதில் லண்டன் போலீஸ்தான் நமக்கு ஒரு மாடல் என்ற அளவில் வைத்துக்கொண்டிருக்கின் றோம். லண்டன் போலீஸ்தான் சிறந்த போலீஸ் என்று நாமெல் லாம் கூறிக்கொண்டு வருகிறோம். அப்படியிருந்தும், அந்த நாட் டில்கூட போலீஸைப்பற்றி குறை கூறுகின்றார்கள். ஆகவே குறை களே நம்மிடத்தில் இல்லை என்று சொல்ல வரவில்லை, குறைகள் இருக்கத்தான் செய்கின்றன. இந்தக் குறைகளை எல்லாம் எவ் விதம் குறைக்க வேண்டும் என்பதைப்பற்றி நாம் மிகவும் அவா கொண்டிருக்கிறோம். அந்த முறையில் நமது போலீஸ் அதிகாரி களும் தொண்டு புரிந்து வருகிறார்கள்.

அடுத்ததாக, லௌட் ஸ்பீக்கரைப்பற்றி இங்கு சொல்லப் பட்டது. கனம் அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள், எதற்காக இந்தக் கட்டுப்பாடு (ரெஸ்ட்ரிக்ஷன்) எல்லாம் வைத்திருக்கிறார்கள், எதற்காக இந்த ஏற்பாடுகள் எல்லாம் என்று. ஏதோ அவரிடத் திலும் கொஞ்சம் சுதந்திராக் கட்சி வாசனை வீசுவதுபோல் இருந்தது. எதிலுமே கட்டுப்பாடு இருக்கக்கூடாது, எதிலுமே கட்டுப்பாடான ஏற்பாடுகள் இருக்கக்கூடாது, எல்லோருமே தங்கள் விருப்பப்படி தான்தோன்றித்தனமாக நடந்துகொள்ள வேண்டும் என்பதுதானே சுதந்திராக் கட்சியின் லட்சியம். தி.மு.க. இப்போது சுதந்திராக் கட்சியோடு கூட்டு சேருவதின் காரணமாகத்தான் இந்த வாசனை இவர்களிடத்திலும் வந்திருக் கிறதோ என்று எண்ணுகிறேன். லௌட் ஸ்பீக்கர் கட்டுப்பாடு வேண்டாம், பேச்சில் கட்டுப்பாடு வேண்டாம், எப்படிவேண்டு மானாலும் பேசலாம், எங்கு வேண்டுமானாலும், எத்தனை மணி நேரம் வேண்டுமானாலும் லௌட் ஸ்பீக்கரை போட்டுக்கொண்டு பேச தடைகூடாது என்று நினைப்பது சரியல்ல. மற்றவர்களுக்கு தொல்லைகள் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதும் அரசாங்கத்தின் கடமையாகும். பேச்சுக்கள் வரம்பு மீறி நடைபெறுவதால்தான் சில சமயங்களில் தகராறுகள் ஏற்படு கின்றன. அது காங்கிரஸ்காரர்களிடத்திலும் ஏற்படுகிறது. சில இடங்களில் அத்துமீறி பேசப்படுகிறது. இது என் கவனத்திற்கு வரும்போது யாராய் இருந்தாலும் நடவடிக்கைகள் எடுக்கப்படு கின்றன. அதனால் சிலருக்கு என் பேரில் கோபம்கூட உண்டு . .

SRI M. KALYANASUNDARAM : இந்த சபையில் பேசுவதையே கண்டிக்கலாமே. கண்டிக்கக்கூடியதை தவிர்க்கப் பார்ப்பதில் நாங்கள் தயங்குவதில்லை.

9th March 1961]

MR. SPEAKER : நீங்கள் இரண்டுபேரும் உங்களுக்குள்ளேயே விவாதித்துக்கொண்டிருந்தால் நான் இங்கு எதற்காக இருக்கிறேன்? (சிரிப்பு.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒலிபெருக்கியை உபயோகிப்பதிலும் ஓரளவு கட்டுப்பாடு வேண்டியதாகத்தான் இருக்கிறது. ஏதோ இந்த கட்டுப்பாட்டை இரவு 10 மணி வரைக்கும் நீடித்து வைக்கக்கூடாதா என்று கேட்டார்கள். அதைப்பற்றி வேண்டுமானால் பரிசிலனை செய்யலாம். அதற்காக கட்டுப்பாடே வேண்டாம் என்று சொல்லுவது சரியல்ல. அதிலும் தேர்தல் காலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. கழிந்த தேர்தல் சமயத்தில் சென்னை நகரத்தைப் பொறுத்தவரை என்னவெல்லாம் சம்பவங்கள் நடந்தது என்பதைப்பற்றி நாம் எல்லோரும் அறிவோம். அதில் எதிர்கட்சிகளுக்கு பொறுப்பே இல்லை என்று சொல்ல முடியாது. யாராவது ஒரு சமயத்தில் ஆத்திரமாகப் பேசினால் அதைக் கேட்கிறவர்கள் பின்னால் தாறுமாறாக நடந்து கொள்கிறார்கள். நகரத்தை எடுத்துக்கொண்டால் தகவல்கள் எனக்குக் கிடைக்காமலில்லை. ஆத்திரமாக யார் நடந்துகொண்டாலும் கண்டிக்க வேண்டியதுதான். காங்கிரஸ் கூட்டத்தில் நடந்துகொண்டாலும் அதை நாங்கள் கண்டிக்கிறோம், அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்கிறோம். தவிரவும், திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர் திரு அண்ணாமலை அவர்கள் தம் மாவட்டத்தில் நடைபெற்ற சில நிகழ்ச்சிகளைப்பற்றிச் சொன்னார்கள். அதன் காரணமாக ஒரு போலீஸ் சூப்பிரண்டன்டை 24 மணி நேரத்திற்குள்ளாக மாற்றிவிட்டார்கள் என்றும் குறிப்பிட்டார்கள். 24 மணி நேரத்திற்குள் மாற்றவேண்டிய எந்த விதமான அவசியமும் வந்துவிடவில்லை. இன்னும் நான் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். தற்போதைய மந்திரி சபை ஏற்பட்ட பிறகு வடார்காடு மாவட்டத்தில் நான்கு சூப்பிரண்டன்ட்டுகள் மாற்றப் பட்டிருக்கிறார்கள். இன்னும் சொல்லுகிறேன், இப்போது இருக்கக்கூடிய சூப்பிரண்டண்டுகூட இன்னும் ஒரு மாதத்தில் மாற்றப்பட்டு விடுவார் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். போலீஸ் அதிகாரிகளை மாற்றுவதற்கு எத்தனையோ நிர்வாக நிமித்தங்கள் இருக்கலாம். அதே போன்றுதான் கலெக்டர் ஒருவரை மாற்றிய போதும் சொல்லப்பட்டது. ஒரு ஊரில் அந்த கலெக்டரோ, போலீஸ் சூபரின்டண்டோ, அவரே இருக்க வேண்டும் என்று சொல்வது ஏன் அவரை மாற்ற வேண்டும் என்று சொன்னாலாவது நம்மால் புரிந்துகொள்ள முடியும்—அங்கேயே இருக்கவேண்டும் என்று சொல்வது அந்த அதிகாரியின் மீதே தவறான அபிப்பிராயத்தை உண்டு பண்ணுவதாக இருக்கும். . .

SRI S. M. ANNAMALAI : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் பேசுகின்றபொழுது, எங்கள் மாவட்டத்திலிருந்து டி.எஸ்.பி., அவர்களை மாற்றியதைக் குறித்து சொன்னார்கள். அந்த டி.எஸ்.பி. அங்கு நான் குறிப்பிட்ட மர டிப்போவின் பேரில் சார்ஜ் செய்த பிறகு தான் மாற்றப்பட்டார் என்ற குற்றச்சாட்டு

[Sri S. M. Annamalai] [9th March 1961

மூன்று ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இருந்து வருகிறது. அந்த மரம்கூட இன்னும் அந்த இடத்திலேயே இருக்கிறது. அதற்காக பைன்கூட போடப்பட்டிருக்கிறது. . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்த மரடிப்போ மீது கேஸ் போடப்பட்டது. அதை கோர்டில் விட்டு விட்டால் அதற்கு போலீஸ் பொறுப்பு எடுக்க முடியாது. அது பற்றி வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று சர்க்காரிலிருந்து உத்தரவு போடப்பட்டது. போலீஸ் ஐ. ஜியும் உத்தரவு போட்டிருந்தார். அதன் பேரில் கேசும் போடப்பட்டது. ஆகவே அவதூறு பேசவேண்டும் என்பதற்காக எதையாவது சொல்வது என்பது முறையல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் எந்தவிதமான பாரபட்சமும் இல்லாமல், போலீசைப் பொறுத்தவரையிலும் எந்த விதமான வித்தியாசமும் இல்லாமல் தான் பணி புரிந்து வருகிறார்கள் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். பலவிதமான கஷ்டமான வேலைகளை போலீஸ்காரர்கள் செய்ய வேண்டியிருக்கிறது. ஃபையர் சர்வீஸ் இருக்கிறது, அதில் உயிரைக்கூட திரணமாக மதித்து வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அதில் ஒரு அதிகாரி கூட சமீபத்தில் உயிரிழக்கவேண்டி நேரிட்டது. பின்னாலே அவருடைய குடும்பத்திற்கு பாராட்டு தெரிவிக்கப்பட்டது. எல்லோரும் ஃபையர் சர்வீஸ் வசதி தங்கள் தங்கள் ஸ்தலத்திற்கு வேண்டும் என்று கேட்கிறார்கள் நம்மிடத்தில் இப்போது 48 ஃபையர் சர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. அதுதவிர 21 ஸ்டேஷன்கள் முனிசிபாலிட்டிகளின் நியமனக்கும் படை இன்னும் அமைக்க வேண்டியிருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள், வருகிற ஆண்டில் ராஜபாளயத்திற்கு ஒரு பயர் சர்வீஸ் நிறுவுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திற்கும் ஃபயர் சர்வீஸ் நிறுவவேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்தப் பக்கத்திலிருந்து பேசிய திரு. பழனிசாமி கௌண்டர் அவர்கள் இதைப்பற்றி குறிப்பிட்டது விசித்திரமாக இருந்தது. நெருப்பு விபத்து வருடத்தில் தவறாமல் நடைபெறுவதில்லை. ஆகவே இது தேவையல்ல என்று சொல்வது சரியல்ல. குறிப்பிட்ட ஆண்டில் இறக்கவில்லை, எனவே இன்ஷூரன்ஸ் செய்தது வீண் என்று கூறுவது போலிருக்கிறது. ஏதோ கனம் அங்கத்தினர் தம் கருத்தை தெரிவித்தார்கள். இன்னும் பலர் போலீஸ் சிப்பந்திகளுக்கு வீடு கட்டிக் கொடுப்பதுபற்றி சொன்னார்கள். அதோடு திறமையைப் பற்றியும் பாராட்டினார்கள். வீடுகள் கட்டிக்கொடுக்கிற விஷயத்திலும் நாம் முதன்மையாகத்தான் இருந்து கொண்டிருக்கிறோம். 1960-61 டிசம்பர் 31-ம் தேதிக்குள் இதற்காக 40 லட்சம் 2 ஆயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிறோம். மேலும் கான்ஸ்டேபிள்களின் சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்று பலர் சொன்னார்கள். இப்பொழுது அவர்கள் சம்பளம் ஓரளவுக்கு உயர்த்தப் பட்டிருக்கிறது. இந்த விஷயத்தில் அரசாங்கம் மிகவும் அனுதாபத்துடன் நடவடிக்கை எடுத்துக் கொண்டு வருகிறது. ஒரு கான்ஸ்டேபிள் சம்பளத்தை கணக்கெடுத்தால் அவர்களது மாத சம்பளம், யூனிபார்ம் அலவன்ஸ்,

9th March 1961] [Sri M. Bhaktavatsalam]

வைத்திய வசதி, கல்வி வசதி இவைகளையெல்லாம் கணக்கிட்டுப் பார்த்தால் 102 ரூபாய் வரை ஆகிறது. அவர்கள் கஷ்டமான வேலை செய்கிறார்கள். இப்பொழுது அவர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் போதும் என்று நான் சொல்லவில்லை. அரசாங்கம் அவர்களது நிலைப்பற்றி அனுதாபத்துடன் கவனித்துக் கொண்டிருக்கிறது. போலீசார் சில சமயங்களில் தம் உயிரையும் துறக்க வேண்டியிருக்கிறது. எதிர்கட்சிகளின் எதிர்ப்பையும் சமாளிக்க வேண்டியிருக்கிறது.

SRI A. GOVINDASAMY : நாங்கள் போலீசுக்கு எதிர்க்கட்சி அல்ல. ஆளும் கட்சிக்குத்தான் எதிர்க்கட்சி.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவலை நினைத்துக்கொண்டு உரலை இடிப்பது போல், எங்களுக்கு எதிர்க்கட்சி என்ற உணர்ச்சியோடு போலீசைத்தாக்கி வருகின்றார்கள்.

போலீஸ் இலாகாவில் பெனவலண்ட் பண்ட் என்று தனியாக ஒரு நிதி வைத்திருக்கிறோம். அதிலிருந்து போலீசாரின் குடும்பத்தினர்களுக்கு படிப்பு வசதி, பள்ளிக்கூடச் சம்பளம் எல்லாம் கொடுக்கிறோம். 1960-ம் வருஷத்திலே இந்த அரசாங்கத்திலிருந்து அந்த நிதிக்கு ரூ. 45,026 கொடுக்கப்பட்டது. மத்திய அரசாங்கமும் இந்த போலீசாரின் சேவையைப் பாராட்டி ரூ. 1,60,000 பெனவலண்ட் பண்டுக்காகக் கொடுத்திருக்கிறார்கள். 1960-ம் வருஷத்திலே ரூ. 62,237.15 பெனவலண்ட் பண்டிலிருந்து செலவு செய்யப்பட்டது. அது அல்லாமல் அவர்களது க்ஷேமநலத்திற்கென்று பிரத்யேகமாக ஒவ்வொரு ஜில்லாவிலும் ஏற்பாடு செய்யப்பட்டு, அவர்களுடைய குடும்ப வருமானத்தை அதிகம் செய்துகொள்ள, அவர்களின் குடும்பப் பெண்மணிகளுக்குத் தொழிற் பயிற்சி அளித்து, அவர்களைக் கொண்டு பொருள்களை உற்பத்தி செய்வித்து, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை நல்ல விலைக்கு விற்பதற்கு ஏற்பாடு செய்து அந்த முறையிலே விசேஷ கவனம் செலுத்தப்பட்டு வருகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 11-30 a.m.

இப்போது நகரப் போக்குவரத்து நெரிசல் பற்றிச் சொன்னார்கள். கனம் அங்கத்தினர் திரு. முத்தையா செட்டியார் சில யோசனைகளைச் சொன்னார். நம் நகரில் போக்குவரத்து நெருக்கடி அதிகமாகத்தான் இருக்கிறது. அதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டிருக்கின்றன. கமிஷனர் அவர்கள் அனுப்பிய மாஸ்டர் ப்ளான் பற்றி கனம் அங்கத்தினர் திரு. விநாயகம் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி பரிசீலனை செய்து நடவடிக்கைகள் எடுத்து வருகின்றோம்.

பெரிய நெருக்கடிகள் ஏற்படும்போது நமது போலீசார் எப்படி சமாளிக்கிறார்கள் என்பதைப்பற்றி பாராட்டுக்கள் தெரிவிக்கப்பட்டன. சமீபத்தில் சென்னை நகரத்திற்கு ராணி அம்மையார் வந்தபோது ஏராளமான கூட்டம் வந்தது. பார்த்து பிரமிக்கும் முறையில் போலீசார் நிலைமையைச் சமாளித்தார்கள். லண்டனிலே ஒரு பெரிய மனிதர் வரும்போது அவரையொட்டி

[Sri M. Bhaktavatsalam] [9th March 1961

போக்குவரத்து ரெகுலேஷன் செய்யவேண்டுமானால், அந்த பெரிய மனிதர் ஒரு இடத்திற்கு வருவதற்கு 15 நிமிஷங்களுக்கு முன்னாலேயே வண்டிகளை நிறுத்தி விடுவார்கள். இங்கே ஏர்-போர்ட்டில் இவ்வளவு கூட்டம் இருந்தும்கூட 5 நிமிஷத்திற்கு முன்னால் வரையில் வண்டிகளையும் லாரிகளையும் விட்டு வந்தார்கள். அந்த முறையில் நம்முடைய போலீசார் கூட்ட நெருக்கடியை சமாளித்து வருகிறார்கள். ரொம்பவும் அதிகமான கூட்டம் வரும் போது, என்னதான் சமாளித்தாலும் கொஞ்சம் கஷ்டம்தான் ஏற்படும். எதிர்கட்சித் தலைவர் அவர்கள் கார் போவது தடைப் பட்டது என்று குறிப்பிட்டார்கள். என்னுடைய கார்கூட நின்று விட்டது. ஒரு அலுவலுக்கு குறித்த நேரத்தில் போக முடியவில்லை. (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி : கொடி இருந்திருக்காது). கொடி இருந்தது. அதற்காக மந்திரி கார் என்று என் காரை முன்னதாக விட்டு விடவில்லை. எல்லா கார்களையும் நிறுத்திவிட்டு என்னுடைய காரை மட்டும் விட்டுவிடவில்லை.

MR. SPEAKER : இந்த மான்யத்திற்கு ஒதுக்கிய நேரம் 12 மணிக்கு முடியும். இன்னும் அதிகமான நேரம் அமைச்சருக்குத் தேவைப்படுமானால் சபையின் அனுமதியைப் பெறவேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மதுவிலக்கைப் பற்றி சரியாக நடக்கவில்லை என்று சொல்வதில் பிரயோசனம் இல்லை. மதுவிலக்கு சரியாக நடந்துகொண்டுதான் வருகிறது. குற்றங்கள் குறைந்துகொண்டுதான் வருகின்றன. இதனால் மக்கள் பலன் அடைந்து வருகிறார்கள் என்று நான் கூறுவேன். இதை கனம் அங்கத்தினர்களும் உணர்வார்கள்.

இன்னொன்று, போலீஸ்காரர்களுக்கு வசதி செய்துகொடுக்க வேண்டுமென்று சொல்லி நிலம் கொடுத்தால் என்ன என்று சொன்னார்கள். போலீஸ்காரர்களுக்கு வசதி செய்து கொடுக்கிறோம். அவர்களுக்கு நிலத்தைக் கொடுக்க வேண்டுமென்றால், அவர்கள் நிலத்தை எப்படி உழுவது? சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கு நேரம் இருக்குமா? எக்ஸ்-சர்விஸ்மென்களுக்குக் கொடுத்ததுகூட சரியாக நடைபெறவில்லை. தியாகிகளுக்குக் கொடுத்ததுகூட சரியாக அவர்கள் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. அவர்கள் தாம் பெற்ற நிலத்தை விற்றுவிடத்தான் பார்க்கிறார்கள். ஏதோ நல்ல எண்ணத்தோடு யோசனை கூறப்பட்டதென்றாலும் அது அவ்வளவு பலன் அளிக்கக் கூடியது என்று நான் நினைக்கவில்லை. வேறு எந்தெந்த வகையிலே போலீசாருக்கு உதவி அளிக்க முடியுமோ அந்தந்த வகைகளில் அளித்துத்தான் வருகிறோம்.

மற்றொரு அங்கத்தினர் டி.ஐ.ஜி. எதற்கு என்று சொன்னார்கள். எத்தனையோ சிக்கலான பிரச்னைகளை கவனிக்க வேண்டியிருக்கிறது. இங்கே நடந்த விவாதத்திலேகூட பல பிரச்னைகள் பற்றி கூறப்பட்டது. அவசியம் இருப்பதால்தான் டி.ஐ.ஜி.களை வைத்திருக்கிறோமே தவிர, யாருக்கோ உத்தியோகம் கொடுக்கவேண்டுமென்ற அக்கறை அரசாங்கத்திற்கு இல்லை.

சில இடங்களில் போலீசுக்கு டிரான்ஸ்போர்ட் வசதி போதவில்லை என்று சொன்னார்கள். அதைப் பொறுத்தவரையில் போலீசார் பேரில் குறை இல்லை. நிதி நிலைமை காரணமாக வேண்டியதை பூராவும் அளிக்க முடியவில்லை. அவர்கள் கேட்கும் அளவு கொடுக்கவில்லையென்றாலும் மிக சிக்கலான நிலைமைகளைக்கூட சிறந்த முறையில் சமாளித்து வருகிறார்கள். நம்முடைய பாராட்டுதலைப் பெற்றிருப்பதோடு மட்டுமல்லாமல் இவர்கள் மற்றவர்களின் பாராட்டுதல்களையும் பெற்றிருக்கிறார்கள். ராணி விஜயத்தின்போது போலீசாரின் ஏற்பாடுகளைப் பார்த்து மற்ற நாடுகளிலிருந்து வந்தவர்களும் பாராட்டினார்கள். இம்மாதிரி ஏற்பாடுகளை வேறெங்கும் கண்டதில்லை என்று சொல்லக்கூடிய முறையில் தொண்டு புரிந்து வருகிற போலீசாருக்கும், அந்த இலாகாவிலுள்ள பெரிய உத்தியோகஸ்தர்களுக்கும், சிறிய உத்தியோகஸ்தர்களுக்கும், கான்ஸ்டபிள்கள் எல்லோருக்கும் என் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொண்டு இந்த மான்யத்தை இந்த மன்றம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri K. ANBAZHAGAN rose.

Mr. SPEAKER : The hon. Member, Sri K. Anbazhagan, cannot make a speech now. I am sorry. I cannot allow. Is the hon. Member pressing his cut motion? Unless the hon. Member withdraws, I have to put it to the vote of the House.

Sri K. ANBAZHAGAN : I press my cut motion, Sir.

Mr. SPEAKER : The question is—

"That the allotment of Rs. 6,63,20,700 under Demand XIV—Police be reduced by Rs. 100".

The Cut Motion was put and lost.

Mr. SPEAKER : I shall now put the Demand to the vote of the House. The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 6,63,20,700 under Demand XIV—Police".

The Demand was put and carried and the Grant was made.

Mr. SPEAKER : I only told the Hon. the Minister that the time allotted for Demand XIV—Police was four hours which would would end by 12 o'clock and that he should finish his reply before that time, as otherwise the permission of the House should be obtained. I did not ask the Hon. the Minister to stop. But the hon. Member, Sri J. Matha Gowder misunderstood me and got angry and that is why I am saying this.

DEMAND XII—ADMINISTRATION OF JUSTICE AND DEMAND XIII—JAILS.

Mr. SPEAKER : Now we have got two demands, viz., XII—Administration of Justice and XIII—Jails. If we sit till 2 o'clock we can finish these two Demands as we have got two hours more or else we will have to sit in the afternoon.